*Kavya-Sangraha Series No. 5.*

# நமது மகாராஜா

A BIOGRAPHICAL SKETCH

OF

# H. H. Sri Chitra Tirunal Bala Rama Varma

MAHARAJA OF TRAVANCORE.

V. V. SHARMA, VIDYABHUSHANA.

PUBLISHED BY

V. Venkatachalam & Bros.,

343, VALIA CHALAI STREET

TRIVANDRUM,

1116.

உ

மகா சிறப்புப் பொருந்தி "ஸசிவோத்தம" முதலிய
உயரிய பட்டங்களுக்குப் பேரணியாகத்
திகழும் திருவாளர்

**ஸர் ஸி. பி. இராமஸ்வாமி அய்யர்**

அவர்களுடைய

**"ஷஷ்டிபூர்த்தி"த் திருவிழாவின்**

நினைவின்பொருட்டுப் பிரசுரிக்கப்பட்டுவரும்
"காப்பியச் சங்கிரக"ப் புத்தகத்
தொடர்பின் ஐந்தாவது வெளியீடாக

# "நமது மகாராஜா"

என்ற இந்நூல்—பேரறிவும் பெரும்புகழும்பெற்று
மாட்சிமையுடன் ஈடற்றவராக இலங்கும்
ஸ்ரீ சித்திரைத் திருநாள் பால இராம
வர்ம மகாராஜா அவர்களுடைய
இன்றுகாறுமுள்ள அரசியற்
செய்திகளைத் தெள்ளெனத்
தெரிவிக்கும் சீர்மைபெற்ற
இந்நூல்—பதிப்பிக்கப்
பட்டிருக்கிறது.

**வித்தியாபூஷண வி. வி. சர்மா.**

# நமது மகாராஜா.

## அத்தியாயம் 1

### அரச குலம்.

இந்திய நாட்டில், எல்லா அரசர்களாலும் வெகுமதிக்கப்பட்டுக் குடிகள் யாவராலும் போற்றப் பட்டு, வஞ்சிநாட்டின் சிங்காசனத்தை அழகுபடுத் திக்கொண்டிருக்கும் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகா ராஜா அவர்கள் இன்றுள்ள சிறந்த மனிதர்களில் வைத்துத் தலைவராக விளங்குகின்றார். அவரு டைய அரசகுலமானது தலைமுறைத்தொடர்பின் பெருந்தன்மையால் மகா சிறப்புப் பொருந்தி இந்தி யாவில் முதலாவதாகத் தோன்றி நிற்கின்றது.

இந்திய நாட்டிலுள்ள அரசகுலங்களில் வைத்து மிகப் பழைமை வாய்ந்தது இராஜபுட்டானாவில் உள்ளது என்று பொதுவாக மொழிவதுண்டு. ஆனால் மற்ற எந்தக் குலத்திற்கும் இல்லாத அவை வற்றுக்குடிகளைக் காக்கும் நிலைமை திருவிதாங்கூர்

அரசகுடும்பத்திற்கேற்பட்டிருக்கின்றது. நமது மகாராஜாவின் முன்னோர்களாகிய சேரவரசர்கள் கையூக்கத்திலும் ஆட்சித்திறமையிலும் புகழடைந்தவர்களாயிருந்தார்கள். குடிகளும் செல்வச் செழிப்புடன் காலங்கழித்து வந்தனர். உழவர்களுடைய முயற்சியால் வளங்குன்றாத நிலங்கள் பயிர் விளைந்து செழிப்புற்று விளங்கின. துறைமுகங்கள் எவ்விதச் சாமான்களையும் வாங்குவதற்கும் விற்றழிப்பதற்கும் தகுதியுடையவைகளாயிருந்தன. கப்பல் வியாபாரிகள் மிகவும் அகன்ற மேல்நாடுகளில் நின்று இவ்விடத்தில் வந்திருந்து வர்த்தகத் தொழிலைச் செழிப்புறச் செய்தனர். சமாதானமும் இன்பமும் நாட்டில் எங்கும் விளையாடிக்கொண்டிருந்தன. குடிகள் அனைவரும் அரசனுடைய செங்கோலை நோக்கி வாழ்ந்து வந்தனர். சேரவரசர்களின் நற்குண நற்செய்கைகளைப்பற்றிப் பழைய காலப் பெரும் புலவர்கள் சிறப்பாகப் பாடியிருப்பதுண்டு.

இவ்விதம் சரித்திரப் புகழடைந்த சேரவரசர்களில் ஒருவர் மாபாரதப் போரில் ஒரு பக்கத்திலும் சாயாமல் நடுவு நிலைமை பெற்றுப் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் உணவுப் பொருள் தயாரித்துக் கொடுத்தனுப்பியதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விதம் ஈகை இயல்புடைய பெருஞ்

சோற்றுதயன் என்ற மகாராஜாவைப் பின்பற்றி வந்த வேந்தர்களில் ஒருவனாகிய, சேரன் செங்குட்டுவன் வட இந்தியாவை அடைந்து திக்விஜயம் நடத்தினான். கொடுங்கோளூர் என்னும் இடத்தில் 'பகவதி' தேவியைப் பிரதிட்டை செய்தான். கேரளத்தில் எல்லா இடத்திலும் 'பகவதிசேவை' என்று வழங்கப்படும் தேவியின் ஆராதனையைப் பரவச் செய்ததும் இவ்வேந்தனே. பாண்டிய அரசனும் சோழ அரசனும் செங்குட்டுவனுடைய தலைமைக்கு வணங்கி நடந்து வந்ததாகச் சரித்திரம் முறையிடுகின்றது.

அக்காலத்தில் சேரவரசர்களுடைய பெரும் பதவி தெற்கு முதல் வடக்கு இறுதியாக எண்ணூறுமைல் தூரம் பரவியிருந்ததெனப் பழைய நூற்களில் நின்று தெரியவருகின்றது. அரசர்களும், கல்வியறிவும், பின்வரும் துன்பங்களை முன்னறிந்து காக்கும் திறமையும், வலியுடைமையும், செல்வமும், ஆற்றலும், நீதிவல்லமையும் பெற்றவர்களாயிருந்தனர். திருவஞ்சைக்களத்தில் ஸ்திரமாக இருந்துவந்த சேரவரசனுக்கு உதவியாக வடக்கும் தெற்கும் ஒவ்வொரு பிரதிபுருடர்கள் அமர்த்தப்பட்டிருந்தார்கள். இவர்களும் அரசகுலத்தைச் சார்ந்தவர்களே. இப்படிக் கேரள நாட்டின் வடக்குக் கடைசியிலுள்ள கோலத்து நாட்டி

லும் தெற்குக் கன்யாகுமரிக் கடற்கரையிலுள்ள பத்மநாபபுரத்திலும் சேர அரசகுலத்தின் இரண்டு கிளைகள் நாளடைவில் நிலைபெற்றன. இவ்விரண்டு கிளைகளிலும் வைத்துப் பத்மநாபபுரத்தில் இருந்துவந்த கிளையானது வஞ்சி அரசவம்சமாக மாற்றம் கொண்டது.

நமது அரசர்கள் வெகுகாலத்திற்கு முன் அயல்நாட்டு வேந்தர்களாகிய பாண்டியர்களுடனும் சோழர்களுடனும் போர் புரிந்து வெற்றியடைந்தார்கள். ஆறுவாமொழிக்கு அடுத்துள்ள சில இடங்கள் சிலபொழுது கைவிட்டுச் செல்லும்படி நேர்ந்ததுண்டு. ஆனால் கைவிட்டுச் சென்ற இடங்களை மறுபடியும் கீழ்ப்படுத்துவதற்கும் சஹ்யமலைக்கு அப்பாலுள்ள சில நாடுகளைக் கைவசப்படுத்தி நெடுநாள் ஆளுவதற்கும் நமது மகாராஜாக்களால் இயன்றது.

சுமார் ஆயிரத்தி ஐந்நூறு வருடங்களுக்கு முன் நமது நாட்டை ஆண்டிருந்த குலசேகர ஆழ்வார் பொதுவாகத் தென் இந்தியாவுக்கே ஓர் சக்கிரவர்த்தி என்ற நிலையில் இருந்தார். வல்லமை ஈகை அறிவு மனவெழுச்சி முதலிய குணங்கள் எப்பொழுதும் தோன்றி நிற்கும் இயல்புடைய அச் சக்கிரவர்த்தி போர்புரியும் முறைகளிலும் செங்கோன்மையிலும் ஒன்றுபோல வல்லவனைத்

தோன்றினார். பிறர் பொருட்டுத் தன்னலமிழக்கும் தன்மையுள்ள அவருடைய நடுவு நிலைமை பொருந்தி அரசாளும் குணமும் தெய்வபத்தியும் இன்றும் பிரசித்தி அடைந்தனவே. குலசேகர ஆழ்வார் ஓர் பெரும் திருமால்பத்தனாக இருந்தார். அவர் சக்கிரவர்த்திக்குடைய பெருமைகளையும் இன்பங்களையும் எல்லாம் துறந்து ஓர் துறவியாகத் தேச சஞ்சாரம் செய்தார். அவர் பெரிய வித்வானும் புலவருமாக விளங்கினார். அவர் தமிழில் 'திருவாய்மொழி' என்ற துதிநூலையும் வடமொழியில் 'முகுந்தமாலை' என்ற சிறந்த நூலையும் இயற்றியுள்ளார். சொற்சுவையும் பொருட்சுவையும் பொருந்திய இந்நூற்கள் அவரது தெய்வபத்திக்கு உதாரணமாக விளங்குகின்றன.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கொல்லம் ஆண்டை நிறுவி நடப்பில் கொண்டுவந்த உதயமார்த்தாண்டவர்மர் என்ற அரசர், மிகத்திறமையுடையவரும் குடிகள் எல்லோராலும் போற்றப்பட்டவருமாக விளங்கினார். கொல்லவருடம் ஐந்தாம் நூற்றாண்டில் இரவிவர்ம குலசேகரன் என்ற மன்னன் 'கோளம்பம்' என்று புகழ்பெற்ற கொல்லம் பட்டணத்தில் மிகப் பெருமையுடன் அரசு புரிந்துவந்தார். அவர் பல யுத்தங்களிலும் வெற்றி பெற்றுப் பாண்டியர்களையும்

சோழர்களையும் கீழ்ப்படுத்தித் தென் இந்தியாவில் சக்கிரவர்த்தியாகச் சோபித்தார். பண்டைக்காலம் தொட்டங்கியே புகழ்பெற்ற காஞ்சீபுரத்தில் 'வேகவதி' என்னும் ஆற்றின் கரையில் வைத்து நிகழ்ந்த மகுடாபிஷேகவிழாவில் அவர் சக்கிரவர்த்தி என்னும் பட்டத்தைப்பெற்றார். இந்த முடிசூடும் திருவிழா மறுபடியும் ஸ்ரீரங்கத்திலும் திருவாடியிலும் அதிவிமரிசையாகக் கொண்டாடப் பட்டது. போர் புரியும் முறைகளிலுள்ள வல்லமையால் எதிரற்றவனாகிய இவ்வேந்தன் இன்றும் 'சங்கிராமதீரன்' (யுத்தத்தில் அஞ்சாதவன்) என்னும் மாற்றுப் பெயருடன் அறியப்படுகின்றார்.

அக்காலத்தில் மகம்மதியர்களுடைய படையெடுப்பினால் தென் இந்தியாவில் பலவிதமாகத் துன்பங்கள் நேர்ந்துகொண்டிருந்தன. குடிகள் இந்துமதம் அழிந்துபோய்விடுமென்றுகூட நடுக்கமுற்றார்கள். ஆனால், சங்கிராமதீரன், மகம்மதியர்களுடைய போர்முழக்கங்களைத் தடுத்து, கோயில்களைப்பழுது பார்த்துச் செவ்வைப்படுத்தி, மதாசிரியர்களுக்கு ஊக்கம் கொடுத்து, இந்துமதத்தைச் சார்ந்தவர்களைக் காத்துக்கொண்டார். அவர், நீனைத்திராமல் காலகதியடைந்ததால் திருவிதாங்கூருக்குச் சஹ்யமலையின் கீழ்ப் பக்கங்களில் இருந்த அரசுரிமை சிதைவுற்றது. ஆயின், பிற்

காலங்களில் கேரளநாட்டின் தலைவர்களாக விளங்கியவர்கள் நமது மகாராஜாக்களே. கி. பி. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் நமது மகாராஜாக்கள் மறுபடியும் பாண்டிய நாட்டில் தங்களது செங்கோன்மையை நிலைநிறுத்தினார்கள்.

அக்காலத்தில், வள்ளியூர், சேரன் மகாதேவி, களக்காடு முதலியவிடங்கள் செல்வம் மிகுந்து விளங்கின. அன்றிருந்த அரசர்களும் பெரும்பாலும் அவ்விடங்களிலேயே வசித்து வந்தனர். 'பூதலவீரன்' எனப் பட்டம் பெற்ற உதயமார்த்தாண்டவர்மா என்ற மகாராஜா சோழ குலத்தில் பிறந்த ஓர் அரசகுமாரியை மணம் புரிந்து கொண்டார். இவரைப் 'புலிமார்த்தாண்டவர்மா' என்று அழைப்பதுண்டு. இந்த மகாராஜாவின் ஆட்சிக் காலத்தில் விஜயநகர ராஜ்யத்தில் நின்று வந்த படைகளுடன் ஓர் பெரும் போர் நிகழ்ந்தது. இப்போரில் வெற்றியடைந்தது யாரென்றும் தோல்வியடைந்தது யாரென்றும் உள்ள வரலாறு தீர்மானமில்லாமல் தர்க்கப்பட்டிருக்கின்றது. வெளிநாட்டாராகிய சரித்திர நூலாசிரியர்கள் விஜயநகர சேனை வெற்றியடைந்ததாக வெளிப்படையாக முறையிடுகின்றனர். ஆனால், அது உண்மையல்ல. வெற்றியடைந்தது நமது சேனையும், தோல்வியடைந்தது பெருமையுடன் அஹங்க

ரித்து திக்விஜயம் நடத்துவதற்காகப் புறப்பட்டு வந்த 'வடுகர்'களும் ஆவர் என்பது இப்பொழுது தெளிவாயிருக்கின்றது. வடுகர்கள் இரண்டாவதும் போர் புரியத் தலைப்பட்டனர். அப்பொழுதும் திருவிதாங்கூரே வெற்றியடைந்தது. மிகப் பழைய காலம் முதல் திருவிதாங்கூர் மகாராஜாக்கள் அஞ்சாத நெஞ்சம் உடையவர்களாகவும் குடிகளிடத்து அதிக அன்புடையவர்களாகவும் இருந்தார்கள் என்பதில் ஐயமில்லை. யுத்தத்திறமையிலும் அரசு புரியும் வல்லமையிலும் நமது அரசர்கள் ஒப்பற்றவர்களாக விளங்கினார்கள். அவ்விதமிருந்த முன்னோர்களுடைய அறிவாற்றல்களும், விரைவுடைமை, கல்வியுடைமை, வலியுடைமை முதலிய குணங்களும், குடிகளிடத்து அளவற்ற அன்பின் பெருக்கமும் நமது அரச குலத்தில் 'தலைமுறைத் தொடர்பாகத் தெளிந்து தோன்றி இப்பொழுது உயர்ந்த நிலையை அடைந்திருக்கின்றன.

இப்பொழுது நமது மகாராஜாக்களிடம் தெளிவாகக் காணும் நீதியறிவும் நடுவு நிலைமையும் அன்றிருந்த அரசர்களிடத்திலும் இயல்பாக இருந்தன. அவர்கள் பற்பல சாதிகளிலும் மதக் கொள்கைகளிலும் உட்பட்டிருந்த எல்லாக் குடிகளையும் நேசித்துவந்தார்கள். பிற நாட்டாரா

கிய தொழிலாளிகளும் பிறமதத்தைச் சார்ந்த பல சாதியாரும் பண்டைக்காலம் தொடங்கியே திருவிதாங்கூரில் வசித்துவந்தனர். அவர்கள் இறைவஸ்தவர்களுக்கும் மகம்மதியர்களுக்கும் ஆராதனை நடத்துவதற்காகப் 'பள்ளி' கள் கட்டிக் கொள்வதற்குப் போதுமான இடங்களை அளித்துவந்தனர். கீழ்சாதியாருடைய மேல் சுமத்தி வந்த வரிகளை இளைத்துக் கொடுத்தனர். சில சாதியாருக்குக் கோயில் நடையில் செல்லுவதிலும் பொதுக் கிணறுகளைத் தொடுவதிலும் இருந்த இடையூறுகள் நீங்கின. இவ்விதம் அரசர்கள் கைக்கொண்டிருந்த நடுவு நிலைமை, தொழிற்களுடையவும் வர்த்தகத்தினுடையவும் முன்னேற்றத்திற்குத் துணையாக நின்றது. வெகுநாளாக மேல் நாட்டுடன் நடந்துவந்த வர்த்தகத் தொழில் உயர்வுற்றது. கொல்லவருடம் எட்டாவது நூற்றாண்டின் 'தொடக்கத்துடன் போர்ட்டுகீஸ்காரர்கள் வர்த்தகத் தொழிலுக்காகத் திருவிதாங்கூரில் 'பண்டகசாலை'களைத் தாபித்தனர். அதிக தாமசமன்னியில் லந்தக்காரர்களும் ஆங்கிலேயர்களும் இவ்விடத்தில் வந்துசேர்ந்தனர். விழிஞமும் அஞ்சுதெங்ஙும் குளச்சலும் அவர்களுடைய முக்கிய இடங்களாயின. பிறநாட்டாருடைய வரவுக்குப் பிறகு இவ்விடத்தில் நாட்டுத் தலைவர்களின் பலம்

குன்றியது. இராஜாதிகாரம் முறையாக மேற்பட்டது. அரசர்களும் சுதந்திர நிலையில் மதிப்புடன் அதிகாரம் செலுத்தத் தலைப்பட்டனர்.

கொல்லவருடம் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வஞ்சி அரசகுலத்தில், சரித்திரப் பிரசித்தியும், அசைவில்லாமல் குடிகளைக் காக்கும் நிலைமையும், தலைமுறைத் தொடர்புடன் ஓங்கி விளங்கும் புகழும், குடிகள் அனைவருடைய ஆதரவும், வெகுமதியும் பெற்ற ஊக்கமுள்ள ஓர் மகாராஜா பிறந்தார். இவரே மகாராஜா மார்த்தாண்டவர்மர். இவர், இடைக்காலத்தில் சக்திகுறைந்திருந்த இராஜ்யத்தை உயிர்ப்பித்தார். இராஜ்யத்தின் எல்லைகளைப்பரவச் செய்து திருவிதாங்கூரின் வருங்கால சரித்திரத்தை எளிதான வழியிற் போகச் செய்தார். இவர் அயல் நாட்டரசர்களைப் போரில் வென்று அவர்களுடைய இராஜ்யங்களைக் கீழ்ப்படுத்தினார். உயர்ந்த மாதிரியிலுள்ள ஆட்சிமுறைகளை ஏற்படுத்தினார். இராஜ்யத்தை ஸ்ரீபத்மநாபப் பெருமாளுக்குத் 'திருப்படிதானம்' செய்து 'ஸ்ரீபத்மநாபதாஸன்' என்ற பெயரைப் பெற்றார். இவர் சஹ்யமலையின் கீழ்ப்புறம் சென்று கர்னாடிக் நவாபின் சேனைகளைப் பலதடவை தோற்கச் செய்தார். கேரளநாட்டை அடக்கி ஆளுவதற்கும், இவ்விடத்திலுள்ள செல்வங்களையெல்லாம் கைவசப்படுத்திக்

கொண்டு போவதற்கும் ஆக வந்த டச்சுகாரர்களை ஓட்டவைத்தார். திருவிதாங்கூர் அரசகுலத்திற்கும் ஆங்கிலேயர்களுக்கும் இப்பொழுது இருக்கும் அதிகநேசத்திற்கு அடிப்படையாயிருந்தவர் இவரே. இவர் உழவும் வர்த்தகமும் செழிப்பையடையச் சோம்புதல் இன்றி முயன்றார். இராஜாதிகாரத்தைப் பலப்படுத்தினார். சரித்திர நூலாசிரியர்கள் இம்மகானுக்கு 'இப்பொழுதுள்ள திருவிதாங்கூரை நிறுவியவர்' என்ற புகழையளித்துள்ளார்கள். அரசனுடைய கட்டளையைத் தலையிற் சுமந்து ஓய்வின்றி முயற்சி செய்யத்துணிவுகொண்ட பல அமைச்சர்களுடைய தன்னலமற்ற உழைப்பு, இம்மகாராஜாவுக்குக் கிடைத்தது. இவர்களில் தளவா இராமய்யருடையவும் அய்யப்பன் மார்த்தாண்டப் பிள்ளையுடையவும் பெயர்கள் சரித்திரத்தில் முக்கியமாகக் காணப்படுகின்றன.

மார்த்தாண்டவர்ம மகாராஜாவின் மருமகனாகிய இராமவர்ம மகாராஜா நாற்பது வருடகாலம் அரசாட்சி புரிந்தார். இவருடைய ஆட்சிக் காலத்தில் ஆங்கிலேயர்களுடன் உள்ள நேசம் முன்னையினும் மிகுவதாயிற்று. மரணமடைவதற்குக் கொஞ்சம் முன் மார்த்தாண்டவர்மர் மருமகனைத் தம்பால் அழைத்து இரண்டு போதனைகள் கற்பித்துக் கொடுத்தார். அவைகளில் முதலாவது ' திருப்படிதான'

த்தில் உள்பட்டிருக்கும் கடமைகளுக்கு எவ்வித இடையூறும் வருத்தக் கூடாது என்பதும், இரண்டாவது ஆங்கிலேயர்களிடத்துள்ள நேசத்தை மேன் மேலும் வளர்த்திக் கொள்ளவேண்டும் என்பதும் ஆகும். மருமகன் மாமன் கற்பித்த இப்போதனைகளில் நின்று அணுவேனும் மாறவில்லை. மட்டுமல்ல, அவர் ஆங்கிலேயர்களுடைய எதிரிகளுடன் போராடி அவர்களுடைய சாம்ராஜ்யத்தை நிலைநிறுத்துவதில் மிக்க உதவிபுரிந்தார். ஹைதராலியுடன் ப்ரிட்டீஷ்காரர்கள் தொடர்ந்து நடத்திய போரில் இம் மகாராஜாவின் சேனைகள் தென் இந்தியாவில் பல இடங்களிலும் சென்று ஆங்கிலேயர்களுக்குத் துணை புரிந்தன. அன்று அவர்களுக்கு நமது மகாராஜாவைத் தவிர சொல்லத் தகுந்த மற்ற உதவுவார் ஒருவரும் இந்நாட்டில் இருக்கவில்லை. அக்காலத்தில் நிகழ்ந்த படையெடுப்புக்களைப் பற்றிச் சேனைத்தலைவர்களும் மற்றும் எழுதி வைத்திருக்கும் உட்கருத்துக்களையும் சரித்திர உடம்பாடு பெற்றுள்ள செய்திகளையும் வாசித்துப் பார்த்தால் இக்கார்யங்கள் யாவும் வெளிப்படையாக விளங்கும்.

மகாராஜாவினுடைய அசைவற்ற தீர்மானத்தால் வெகுளிகொண்ட டிப்பு சுல்த்தான் நமது நாட்டில் படையெடுக்கலாயினன். ஆனல், இராஜா

கேசவதாஸனின் தலைமையின் கீழ் முன்னேற்றம் கொண்ட வஞ்சிநாட்டு யுத்தவீரர்கள் வீர முழக்கத்துடன் ஏறிவந்த மைசூர்ச் சேனையை வென்று ஓடச் செய்தனர். இவ்வாறு வெற்றியடைந்த திருவிதாங்கூர்காரர்களைத் தோற்கச்செய்து இராஜ்யத்தைப் பாழ் நிலமாக்கி விடவேண்டுமென நினைத்து வலியுடைய சேனையைத் திரட்டிக் கொண்டு நமது எல்லையைக் கடந்து வந்து அழிமதிகள் நடத்திய சுல்த்தானுடைய படைக்கு மறுபடியும் தோற்று ஓடவேண்டியதாகவே நேர்ந்தது.

திருவிதாங்கூரை வெளிநாட்டு எதிரிகளில் நின்று காத்துக்கொள்ளுவதாக ஆங்கிலேயர்கள் ஏற்றுக்கொண்டனர். அதற்காக அவர்களுக்கு ஏற்படும் செலவைக் கொடுத்துக் கொள்ளுவதாகவும் மகாராஜா சம்மதித்தார். இந்த உடம்படிக்கையானது இப்பொழுதும் உறுதியில் இருப்பது இருபக்கத்தாருக்கும் நல்லதாகும். ஆனால், சுல்த்தானுடன் நடத்திய யுத்தவகையில் ஏற்பட்ட செலவைக் கணக்கிட்டது தவறி விட்டதென்றும், உடம்படிக்கைப்படித் திருவிதாங்கூர் அவ்வளவு பணம் செலுத்தவேண்டியதில்லையென்றும், மகாராஜாவும்மந்திரியும் வாதஞ் செய்தார்கள். இதனால் விளைந்த பிணக்குகள் சிறுவராகியபாலராம

வர்ம மகாராஜாவின் காலத்தில் நாட்டில் பெரும் குழப்பத்தை உண்டுபண்ணின. ப்ரிட்டிஷ் ரஸிடெண்டாகிய மேஜர் மக்காளி பணம் முழுவதும் வசூலாக்கிவிடவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார். வரிகளைப் பிரித்தும் கடன் வாங்கியும் சுமந்த தொகைகள் செலுத்தப்பட்டன. ஆயினும், ரஸிடெண்டு பாக்கியையும் உடன் செலுத்தவேண்டுமென்று பிடிவாதம் கொண்டார். வேலுத்தம்பி தளவா பணம் செலுத்த மெய்தா வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். ரஸிடெண்டு, வேண்டுகோளுக்கு இணங்காததால் யுத்தம் நடத்தவேண்டியதாக நேர்ந்தது. ஆனால், தளவா தற்கொலை புரிந்து கொண்டது, நாட்டில் குழப்பம் தீர்ந்து சமாதானம் உண்டாகக் காரணமாயிற்று. பாலராம வர்ம மகாராஜா, வேலுத்தம்பி ஆங்கிலேயர்களுடன் போர் நடத்தியது தனது உடம்பாடுடன் அல்லவென்று ஈஸ்டு இந்தியா கம்பெனியாரை நம்பச் செய்தார். ஆனதால் அவர்களுடன் பெற்ற நேசம் குறையவில்லை.

இவ்விதம் நாட்டில் சமாதானம் ஏற்பட்டதாயினும், அன்று முதல் ப்ரிட்டிஷ் ரஸிடெண்டுகளுக்கு ஆட்சிக்காரியங்களில் கையிட அதிகாரம் கிடைத்தது. அரசன் திடீரென்று நாடுநீங்கியதாலும், சிறுமிகளாகிய இரண்டு ராணிமார்களு

டைய ஆட்சி ஏற்பட்டதினலும் திவான்ஜிகள் நடத்த வேண்டிய பல கார்யங்களையும் ரசி டெண்டுகள் ஏற்றெடுத்து நடத்தலானர்கள். 'கர்ப்பஸ்ரீமான்' ஆகிய ஸ்வாதிதிருநாள் மகாராஜா வின் ஆளுகையின் தொடக்கம் குடிகளுக்கு நன் மைகளையளிக்கும் ஏற்பாடுகளால் புகழ்பெற்றிருக் கின்றது. ஆனல் இம்மகாராஜா அவசியமின்றி ரஸிடெண்டை வணங்காததால் அவருக்குத் தனது ஆட்சிக்காலத்தின் பிற்பகுதி வெறுப்புடன் கழிக்க வேண்டியதாயிற்று. நீதிமன்னனுகிய உத்தரம் திருநாள் மகாராஜாவின் காலத்தில் ப்ரிட்டிஷ் இந்தியாவிலுள்ள ஆட்சிமுறைகள் திருவிதாங் கூரில் முறையாக ஏற்பட்டன. அவருடைய மரு மகனுகிய ஆயில்யம் திருநாள் மகாராஜா திருவி தாங்கூருக்கு இந்தியாவிலுள்ள 'மாதிரி இராஜ்யம்' என்ற புகழை உண்டாக்கிவைத்தார். மனவெ ழுச்சியுடைய ஸ்ரீவிசாகம் திருநாள் அவருடைய அரசாட்சி முறைகளையே பின்பற்றிவந்தார். நாட் டுக்கு மிகவும் நன்மையைப் பெருக்குமெனக் குடிகள் ஆசைகொண்டிருந்த அவருடைய அரசாட்சி ஐந்து வருடங்கள் தானிருந்தது.

அவருடைய மருமகனுகிய ஸ்ரீமூலம் திருநாள் மகாராஜா நாற்பது வருடகாலம் வஞ்சிநாட்டின் சிம்மாசனத்திற்கு அலங்காரமாக விளங்கினர்.

இன்று திருவிதாங்கூரில் காணப்படும் செல்வச் செழிப்பிற்கு முதற்காரணர் இம்மகாராஜா என்பது யாவரும் அறிந்ததே. இவர் குடிகளுடைய நன்மையில் அதிகநோட்டம் கொண்டிருந்தார். கேரள நாட்டிலும் மற்றும் பெயர் பெற்ற அநேகம்பேர்கள் அமைச்சர்களாக இவரையடுத்து இவருடைய கட்டளைப்படி நாட்டிற்கு நன்மையைப் பெருகச் செய்தனர். காட்டு மிருகங்கள் ஓடி விளையாடுவதற்குத் தகுதியுடைய காடுகள் பயிர் செழித்து காணப்பட்டன. இராஜபாதைகளும் 'தோடு'களும் அதிகப்பட்டன. சர்க்காரில் வந்துசேரும் பொதுப் பொருள் பொது நன்மைக்காகச் செலவு செய்யப்பட்டது. ரஸ்தாக்களும் கல்விச்சாலைகளும் வைத்தியசாலைகளும் நாடெங்கும் நிறைந்தன. சர்க்கார் கார்யங்களில் ஜனப்பிரதிநிதிகளுக்கு இதுபோன்ற மற்ற இராஜ்யங்களில் ஒரிடத்திலும் இல்லாத உரிமைகளும் அதிகாரங்களும் அரசனருளால் கிடைத்தன. மகாராஜா நாட்டையும் கடவுளையும் சேவித்துக் காலம் கழித்துவந்தார். அவர் தமது அறுபத்தேழாவது திருவயதில் இகலோக வாழ்க்கையைத் துறந்தார். அதன் ஸ்ரீசித்திரைதிருநாள் பாலராமவர்ம மகாராஜா அரசுரிமை பெற்றுர்.

# அத்தியாயம் 2.

---

## திரு அவதாரமும் இளமைப் பருவமும்.

குடிகளுடைய பாக்கியம் வடிவு பெற்று உதித்தவாறு, ஸ்ரீசித்திரைத் திருநாள் மகாராஜாவின் தாயாராகிய ஸ்ரீசேது பார்வதிபாய் மகாராணியார் 1072-ஆமாண்டு பிறந்தார். சிறுவயதிலேயே நுட்பமான இயற்கையுணர்வும் மேன்மையான அறிவும் ஆட்சிவல்லமையும் இராணியாரிடம் வெளிப்பட்டன. அவருடைய அறிவு நாளுக்குநாள் முதிர்ச்சியுற்றது. எல்லா நூல்களும் அவருடைய மனநுண்மைக்கு அடிமைப்பட்டன. அவருக்கு நாட்டுவரலாறுகளும் சங்கவரலாறுகளும் மற்றும் எளிதில் வசப்பட்டன. சங்கீதம் முதலிய கலைகளில் அவருடைய வல்லமை மிகப்புகழையடைந்தது. சுதேசப்பற்று அவரிடத்து அணியாக விளங்கிற்று. 1082-ஆமாண்டு சித்திரைமாதம் அவருக்கு 'பள்ளிக்கெட்டு'த் திருமணம் மிக்க விமரிசையுடன் கொண்டாடப்பட்டது. மணவாளர், கிளிமானூர் அரண்மனையைச் சார்ந்தவரும் உயர்ந்த பரீட்சையில் தேறியவரும் ஆகிய இரவிவர்ம கோயித்தம்பிரான் ஆவர். அழகிய மண

வாழ்க்கையுடன் ஐந்து ஆண்டுகள் சென்றதும், வஞ்சிநாட்டின் கற்பகக்கொடியாகிய இராணியார் கர்ப்பம் பெற்றனள். அதே வருடம் ஆனிமாதம் 'திருக் காப்பு' அடியந்திரமும், 1088-ராமாண்டு ஆவணி மாதம் சீமந்தச் சடங்கும் பழைய வழக்கப்படி நன்ருக நடந்தேறியன. குடிகள் எல்லோரும் மனமகிழ்ச்சி பூண்டனர்.

திருவிதாங்கூரில் குடிகள் அனைவருக்கும் 1088-ாமாண்டு அற்பசி மாதம் 22-ாம் தேதி, ஓர் நல்ல நாளாக விளங்கிற்று. அன்று இரவில் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா அவர்கள் திருவவதாரம் செய்தார். மகாராஜாவின் திருவவதாரம் நாட்டுக் குடிகளுக்கும் அரசகுலத்திற்கும் இதற்கு முன் இல்லாத மன மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஏனென்ருல், 1046-ாம் ஆண்டுக்குப் பிறகு அன்றுவரையிலும் அரசகுலத்தில் ஓர் குழந்தை பிறக்கவில்லை. 1036-ாமாண்டு சாவடைந்த மகாராஜாவின் காலத்தில் நடைபெற்ற தத்தினுல் அரசவம்சத்திற்கு உறுதியான மக்கள் நிலை பெறுவதற்குரிய நன்மைகளொன்றும் ஏற்படவில்லை. அன்று தத்தெடுக்கப்பட்ட இளைய ராணியாருக்கு தேகதிடமும் அழகும் நல்லொழுக்கமும் புத்திக் கூர்மையும் மற்றெல்லா நன்மைகளும் உடையவராகி மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். ஆயினும்,

அவர்கள் எல்லோரும் முப்பதும் முப்பத்தைந்தும் வயதுள்ள நல்ல பிராயத்தில் சாவடைந்தனர். அதன் பிறகு, ஸ்ரீமூலம்திருநாள் மகாராஜா பின் துணைக்கும் பின் ஆளுகைக்கும் மருமக்களில்லாமல் மிகவும் துன்பமுற்றார். குடிகளுக்கு அளவற்ற ஆசைமடுப்பும் வருத்தமும் இருந்தன. இவ்விதம் வெகுநாள் துன்பமுற்ற அரசனுக்கும் குடிகளுக்கும் ஓர் பேரருளாக நற்பொழுதில் சிங்காசனத்திற்கு உரிமையுடைய அரசிளங்குமரன் பிறவி பெற்ற செய்தியானது, தண்மையுடைய இளங்காற்றைப் போலக் குடிகளுக்கு ஆறுதலையுண்டுபண்ணியது. சேதுபார்வதிபாய் இராணியாருக்கு யவ்வனப்பருவம் தொடங்கியும் சிறுமைப் பருவம் நீங்காத பிராயத்தில், திருவிதாங்கூருக்கும் கேரள நாட்டுக்கும் மட்டுமல்ல, இந்திய நாட்டுக்கே மேன்மையைப் பெற வழி காண்பிப்பவரும் உலகத்திற்குத் திவ்யச் செல்வமும் ஆகிய ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா வஞ்சிகுலமாகும் பால்கடலில் உதயம் செய்தார். மருமகனுடைய உதயமானது ஸ்ரீமூலம் மகாராஜாவுக்கு, அரச குலத்தின் பின்தொடர்பைப் பற்றி இருந்த எவ்வித ஐயங்களையும் அகற்றியது. அவர் இன்பக் கடலில் முழுகி மனத்தை ஸ்ரீ பத்மனாபப் பெருமானுடைய திருவடித்தாமரைகளில் சேர்ப்பித்தார். அருமை

மருமகன் பிறந்த இன்பச் செய்தியைப் பரவச் செய்யும் தந்திவார்த்தைகள் திசைகளை அளாவிப் பறந்தன. குடிகள் கூட்டம் கூட்டமாக மேளதாளங்களுடனும் விளக்குகளுடனும் சந்தோடமாகச் சத்தமிட்டுக் கொண்டு இராஜபாதைகளில் வந்து நிறைந்தார்கள். வெகுநாள் இருளில் அசைவற்று இருந்தவர் சூர்யோதயத்தைக் காண விரும்புவதைப் போலக் குடிகள் அரசிளங்குமரனுடைய திருமுகம் கண்டு களிக்கப் பேராசை கொண்டனர். பெருந்தன்மையுடைய அம்மை மகாராணியார் மறுநாள் முதல் குடிகளுடைய ஆசை நிறைவேறும்படிக் கட்டளையிட்டார். ஸ்ரீமூலம் திருநாள் மகாராஜாவும் இத் தீர்மானத்தில் மகிழ்வுற்றார். குடிகள் அரசிளங் குமரனைக் கண்டு மனம் களித்தனர். கண்டு திரும்பும் பிரஜைகளுடைய முகங்கள் சமாதானத்துடனும் இன்பமுடனும் சோபித்தன. ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜாவின் திருவவதாரத்தால் நாடு முழுவதும் தெளிந்து காணப்பட்டது. முக்கியமான கோயில்களிலெல்லாம் ஆராதனைகளும் உணவளிப்பும் பெரிய மட்டில் நடைபெற்றன. பற்பல சாதியையும் மதத்தையும் சார்ந்த குடிகள் எல்லோரும் மகாராஜாவின் நீடித்த வாழ்நாளுக்கும் செல்வச் சிறப்பிற்கும் ஆகக் கடவுளை வேண்டிக் கொண்டனர். இன்பச் செய்தியைத் தெரிவிக்கும்

தந்திகளும் எழுத்துக்களும் அரண்மனையிலும் 'தேவாரத்து கோயிக்கலி'லும் குன்ருக வந்து திரண்டன.

1088-ஆமாண்டு சித்திரைமாதம் 10-ஆம் தேதி அரசிளங்குமரனுக்குப் பேரிடு கலியாணமும் சோறூட்டல் சடங்கும் மகிழ்வுடன் கொண்டாடப்பட்டன. அன்றைத்தினம், ஸ்வாதி திருநாள் பிறந்து நூறுவருடம் நிறையும் புண்ணியநாளும் ஆயிருந்தது. சடங்குகள் 'தேவாரத்து கோயிக்கல்' என்ற இடத்தில் வைத்து நடைபெற்றன. தலைநகரில் அழகிய பல அரண்மனைகள் இருந்தாலும் சடங்குகள் யாவும் முன் வழக்கப்படி குடும்ப வீடாகிய தேவாரத்து கோயிக்கலில் வைத்தே நடந்துவருகின்றன. பல மகாராஜாக்களுடையவும் மகாராணிமார்களுடையவும் அருளினுலும் பரம்பரையின் சிறப்பாலும் அருள்பெற்ற இந்த இடத்தில் அடியந்திரத்திற்கு வேண்டியவை எல்லாம் அரசனுக்குப் பொருத்தமான மட்டில் தயார் செய்யப்பட்டிருந்தன. யானைகளும் குதிரைகளும் பட்டாளங்களும் மற்றும் தேவாரத்து கோயிக்கலின் உள்ளும் வெளியும் கூடி நின்று திவ்ய முகூர்த்தத்தின் மேன்மையை வெளிப்படுத்தின. அரசகுடும்பத்தின் சுற்றத்தார் ஆகிய க்ஷத்திரியத்தலைவர்களும் சாஸ்திர அறிஞர்களாகிய அந்தணர்க

ளும் உயர்ந்த உத்தியோகஸ்தர்களும் முன்னடியே வந்திருந்தார்கள். குறிப்பிட்ட சமயத்தில் ஸ்ரீமூலம்திருநாள் மகாராஜா தேவாரத்து கோயிக்கலில் எழுந்தருளி, சோறூட்டல் நடத்துவதற்காகத் தயார் செய்திருந்த 'கண்ணடித்தள'த்தில் வந்து கிழக்கு நோக்கி அமர்ந்தார். அமர்ந்ததும் ஸ்ரீபத்மநாபப்பெருமாளை உள்ளத்தில் நினைத்துக் கொண்டு அரசிளங்குமரனைக் கைகளால் எடுத்துத் தமது மடியில் இருக்கச் செய்தார். இவ்விதம் கொஞ்சநேரம் இன்பமுற்றபின், மகாராஜா அரசிளங்குமரனுக்கு 'ஸ்ரீராமவர்மர்' என்ற பெயரிட்ட பிறகு, தமது கைகளால் உணவையெடுத்து ஊட்டினர். முன் வழக்கப்படி கொச்சி மகாராஜா முதலிய மகான்களுடைய மரியாதைகள் நடந்தன. அந்தணர்களுக்கு எல்லார்க்கும் ஒப்பப்பூரி தட்சிணையும் விருந்துச் சாப்பாடும் கொடுக்கப்பட்டன. மகாராஜா பலருக்கும் தகுதிப்படி பரிசுகள் அளித்தார்.

1089-ாமாண்டு அற்பசிமாதம் 17-ாம் தேதி 'படியேற்ற' விழா நடைபெற்றது. அரசகுலத்தைச் சார்ந்தவர்கள் ஸ்ரீபத்மநாபப்பெருமாள் கோயிலில் சென்று அங்குள்ள 'ஒற்றைக்கல்மண்டப'த்தில் ஏறி நடத்தும் ஓர் ஆராதனை, 'படியேற்றம்' என்ற பெயரினல் வழங்கப்படுகிறது. காலையில்

ஆற்றிங்கல் இளையமகாராணியார் அரசிளங்குமர னுடன் கோயிலில் எழுந்தருளினர். ஆற்றிங்கல் மூத்தராணியார் அவ்விடம் வந்து அரசகுமார னைக் கையால் எடுத்து ஸ்ரீமுகமண்டபத்தில் படுக்க வைத்துத் திரும்பவும் அவ்வாறே கையிலெடுத்து 'வட்டகப்ரசாத'மும் (சிறு கிண்ணத்தில் வைக்கப் பட்ட நிர்மால்யம்) பெற்றுக் கீழ் இறங்கினர். கோ யிலுக்குள் உள்ள எல்லா தேவர்களையும் வணங்கிக் 'காணிக்கை'யும் இட்ட பிறகு, அடுத்துள்ள மற்றக் கோயில்களிலும் சென்று வணங்கிப் பிரசாதம் பெற்ற பின், தேவாரத்து கோயிக்கலுக்குத் திரும் பிச் சென்றார். அதே மாதம் 13-ம்தேதி அரச குமாரனுடைய வருடப்பிறப்புநாள் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அரசுக்குரிமையுள்ள இராஜகுமாரன் ப்ரிட்டீஷ் கவர்ன்மெண்டின் உடம் பாடுடன் இளவரசராக விளம்பரம் செய்யப்பட் டார். இளவரசர் தாயார் மகாராணியாருடன் 'வடக்கேக் கொட்டாரம்' என்ற அரண்மனையில் எழுந்தருளி வசித்துவந்தார்.

தாயார் மகாராணியார், இளவரசர் முறையா கச் செல்வமுடன் வளர்ந்துவருவதையும், அதற் கேற்ப அவருடைய அறிவின் நுட்பத்தையும் கண்டு மனக்களிப்புற்றனர். இளவரசரை கண்டு மனம் களிப்பதில் மகாராஜாவும் அதிக விருப்ப

முடையவராக இருந்தார். தனது அன்புக்கு இருப்பிடமாகிய குடிகள் வருங்காலத்தில் தக்க தலைவனையடைவர் என்ற எண்ணம் அவருக்குத் தேறுதலையும் இன்பத்தையும் அளித்தது. இவ்வாறு சுமார் நாலு வருடம் சென்றதும், 1092-ஆமாண்டு புரட்டாசி மாதம் சேதுபார்வதிபாய் மகாராணியார் ஸ்ரீ கார்த்திகைத் திருநாள் இராஜகுமாரியைப் பெற்றெடுத்தனர்.

1097-ஆமாண்டு பங்குனிமாதம் 9-ஆம் தேதி உத்தராடம் திருநாள் ஸ்ரீ மார்த்தாண்டவர்ம இளைய ராஜாவும் பிறந்தார். இவ்விதம் அரசகுமாரர்களாலும் அரசகுமாரியாலும் அழகிய அரண்மனையில் ஸ்ரீசேதுபார்வதிபாய் மகாராணியார் பொங்கிய இன்பமுடன் வாழ்ந்து வந்தனர். நல்லூழினால் அரசகுலமாகும் மரம் தழைத்து வளர்ந்து வருவதைக் கண்ணுற்ற கிழவராகிய ஸ்ரீமூலம்திருநாள் மகாராஜா மிகவும் தேறுதலடைந்தார். குழந்தைகளிடம் அன்பு பெருகிய தாயார் மகாராணியார், அவர்களுக்குக் கல்வி பயிற்றுதலில் அதிகநோக்கம் கொண்டனர்.

எழுத்துக்களும் சொற்களும் விரைவாகக் கற்றுத் தெளிந்த இளவரசர் மிகவும் சுருங்கிய நாட்களுள் வாசகபாடங்களைக் கசடறக் கற்கத்

தொடங்கினார். மலையாளத்தில் பொது அறிவைப் பெற்ற அவருடைய புத்தி வடமொழியிலும் ஆங்கிலத்திலும் ஊக்கமுடன் பதிந்தது. படித்த பாடங்களின் கருத்துக்களை அமைத்து இனிமையாகப் பேசும் திறமையும் இவர்பாற் காணப்பட்டது. தாம் படிக்கப் புகுந்த நூல்களின் கருத்துக்களை ஆசிரியர்களிடம் வலிந்து சென்று ஊன்றிக் கேட்கும் தன்மையை அவர் பெற்றார். இவருடைய அறிவின் முதிர்ச்சியைக் கண்ட தாயார் மகிழ்ச்சியடைந்தனர். மட்டுமல்ல, படம்வரைதல் போட்டோ பிடித்தல் முதலிய ஏனைய கலைகளிலும் அவருக்கு இருந்த இயற்கையுணர்வு பெருகலுற்றது. அவர் இலக்கண இலக்கிய நூற்களிலும் சங்கீதத்திலும் ஒன்றுபோலக் கலைமகளின் திருவருளைப் பெற்றார். அவருடைய நோக்கங்கள் பற்பல வழிகளிலாகச் சென்றன. அவைகளுக்கெல்லாம் ஊக்கமளித்து அறிவை உயர்த்துவதில், யாவரும் மகிழ்ந்து மேற்கொள்ளும் இயல்பினர்களாகிய ஆசிரியர்கள் செய்த முயற்சி, தாயாருடைய சோம்புதலற்ற மேற்பார்வையால் மிகப் பயனளித்தது. தாயார் மகாராணியார் போதனை முறைகளை எடுத்துக் காட்டி கல்வி கற்பிப்பதில் ஆசிரியர்களுக்கு உதவி செய்துவந்தனர். சங்கீதத்திலும் பிறநூற்களிலும் புகுந்திருக்கும் உட்கருத்துக்களைத் தெளிவாக எடுத்து விளக்கிக் கற்பித்து

வந்தனர். சரீர சக்தியை வளர்ப்பதற்குரிய பயிற்சி முறைகளைப் போதனை செய்தார். இளவரசருடைய புத்தியாகிய மரம் தாயாரின் அன்பார்ந்த போதனை வருஷத்தால் தழைத்து வளர்ச்சியுற்றது. ' திருவிதாங்கூர் இராஜ்யம் பெருமையை மேவி மேன்மையை அடையவேண்டும். தனது அருமை மைந்தனின் சிறந்த ஒழுக்கங்களாலும் ஆட்சித்திறமையாலும் இப்பயனைப் பெறவேண்டும். பிறருதவியின்றித் தாமே சிந்தித்துக் கார்யங்களைத் தீர்மானிக்கப் புதல்வனுக்கு வல்லமை ஏற்படவேண்டும் ' என்றிவ்வாறெல்லாம் தாயார் பேரவாக் கொண்டனர். இவ்விதம் கல்வி பயின்று வருவது எவ்விதத்திலும் நல்லதென்று ஸ்ரீமூலம்திருநாள் மகாராஜாவும் திட நம்பிக்கை கொண்டார்.

1099-ஆமாண்டு ஆடிமாதம் நாட்டில் பல துன்பங்களும் ஏற்பட்டன. மழை பருவம் தவறி அதிகமாகத் தொடர்ந்து பெய்தது. நாட்டின் பல பக்கங்களிலும் வெள்ளம் பொங்கிப் பயிர்கள் அழிந்தன. இராஜபாதைகள் தகர்ந்தன. சாவடைந்த ஆடு மாடுகள் நீரில் ஒழுகிப் போயின. குடிகள் அதிகமாக மரணமடைந்தார்கள். நாள் செல்லுந்தோறும் மழை ஓய்வின்றிப் பெய்து கொண்டிருந்தது. உணவுப் பொருள் இல்லாமல் சாதுக்கள் வருந்தினார்கள். தங்குவதற்கும் இடமில்லாமல் ஆயிற்று. இத்தகைய பாக்கியக்கே

டின் இடையில் ஸ்ரீ மூலம்திருநாள் மகாராஜா பரமபதமடைந்தார். அவருக்குச் சரீரசுகம் குன்றக் காரணம் அவருடைய அறநெறி தவறுதுள்ள வாழ்க்கையே. ஆடிமாதம் அமாவாசியை நாள் அவருக்குச் சரீரசுகம் சிறிது குறைவாகத் தோன்றி யது. வைத்தியர்கள் நீராடக்கூடாதெனத் தெரி வித்தார்கள். ஆனல் அறநெறியில் மனக்கட்டு டைய மகாராஜா வைத்தியர்கள் சொல்லை மீறி வழக்கம்போல் குளித்துப் பித்ருக்களுக்கு மந்திர நீரும் இறைத்தார். உயர்ந்த பதவியைப் பெற்ற வர்— அதிலும் ஸ்ரீ பத்மநாபதாஸன்— குடிகள் மேற்கொள்ளவேண்டிய குணங்களுடன் விளங் கும் அரசன், நாள்ச் சடங்குகளைத் தவறி இருப் பது சரியல்லவென்பதை உணர்ந்த மகாராஜா, தமது உடம்பைக் கருதாமல் சாஸ்திரவழியிலுள்ள சடங்குகளை நடத்தலானர். அதனல் ஏற்பட்ட சௌக்கியக் குறைவு சுரநோயாக மாற்றம் கொண் டது.

நோயைத் தடைய வைத்தியர்களால் இயல வில்லை. மேன்மேலும் அபாய நிலைமை அதிக மாகத் தோன்றியது. ஆடிமாதம் 23-ம்தேதி நடு இரவில் மகாராஜாவுக்கு நோய் மூர்ச்சையுற்றது. இருளையும் மழையையும் பொருள்படுத்தாமல் ஆயி ரக்கணக்கான ஜனங்கள் கோட்டையினுள் புகுந்து

கூடி நின்றார்கள். அவர்களுடைய ஆசைகள் யாவும் மடுத்தன. அத்தடவை மகாராஜா நோயில் நின்று சுகம் பெறுவார் என்று எண்ணிப் பலரும் ஆறுதலடைய முயன்றார்கள். அவர்களுடைய எண்ணம் விபரீதமாயிற்று. திவான் மிஸ்டர் ராகவய்யா ஆள்திரளின் உட்புகுந்து செய்தியை வெளியிட்டார். தீராகிய மந்திரியின் நா உழன்றது. கண்ணீர் தாரைதாரையாக வழிந்தது. இச் செய்தியைக் கேள்வியுற்ற சிலர் வாய்விட்டு அழுதனர். மற்ற சிலர் உச்சத்தில் கூக்குரலிட்டனர். 'ஸ்ரீபத்மநாபப் பெருமாளே! கடவுளே! இப்படியும் வந்துவிட்டதே!' என்ற அழுகையொலிகள் வானைப் பிளந்தன. அரண்மனையினுள் நிகழ்ந்த செய்தி சொல்லுதற்கில்லை. அழுகைச் சத்தமின்றி மற்றொன்றும் கேள்பதற்கில்லை. இராணிமார்களுடைய வருத்தத்தைக் கண்ணுற்ற சேவகர்கள் விம்மியழுதார்கள். 'எங்கள் மகாராஜாவே! அடியார்களுக்கு இனி யாருண்டு' என்ற முறைவிளி அவர்களுடைய நெஞ்சத்தின் அடித்தட்டில் நின்று வந்துகொண்டிருந்தது.

இளவரசர் அடைந்த வருத்தம் சொல்லுக் கடங்காது. அவருக்கு அத்தகைய மதிப்பும் பட்சமும் மாமன் மீதிருந்தது. ஆனால், தாமே மாமனுக்கு, சாவுக்குப் பின் வரும் சடங்குகளை நடத்த

நேரிட்டதனால் இளவரசர் தமது வருத்தத்தை வெளியிற் காட்டாமல் தைரியம் கைக்கொண்டார். மறுநாள் காலையில் நாடுநீங்கிய மகாராஜாவின் உடல் தகனம் பண்ணுவதற்காகப் 'பள்ளியடக்க முக்கி'ற்குக் கொண்டுபோகப்பட்டது. அப்பொழுது ஸ்ரீசித்திரைத் திருநாள் இளவரசர் கால்நடையாகவே அவ்விடத்திற்கு எழுந்தருளினார். இளவரசரின் வருத்தத்தைக் கண்ணுற்ற நாட்டாருடைய சங்கடம் இரட்டிப்படைந்தது. சடங்குகள் ஒன்றொன்றாக நிகழும்பொழுதெல்லாம் அவரது கண்களில் நீர் ததும்பியது. ஆயினும், தமது பதவிக்கு இசைந்த மேன்மையுடனும், தமது பிராயத்தைக் கடந்த ஆற்றலுடனும் அவர் சடங்குகளையெல்லாம் செவ்வையாக நடத்தலானார். இளவரசர் 'பள்ளியடக்கம்' (பிணத்தையடக்குதல்) தொடங்கி 'ஆட்டவெலி' (வருடக்கடைசியில் இடப்படும் சிராத்தம்) வரையிலும் எல்லாச் சடங்குகளையும் அதிக வணக்கமுடன் நடத்தினார் என்பது எடுத்துக் கூறவேண்டிய செய்தியாகும்.

---

# அத்தியாயம் 3.

## அரசுரிமை பெற்றது.

ஆயிரத்தி நாறுமாண்டு ஆவணிமாதம் 15-ாம் தேதி ஸ்ரீ சித்திரைத் திருநாள் இளவரசர் அரசுரிமை பெற்றார். அவர் அன்று காலையில் ஸ்ரீ பத்மநாபப் பெருமாள் கோயிலில் எழுந்தருளி சுவாமிதரிசனம் செய்து காணிக்கையும் இட்டார். பிறகு 'திருப்படிதானம்' நிகழ்ந்த பொழுது மார்த்தாண்டவர்மமகாராஜா, பெருமாள் சன்னிதியில் வைத்த வாளை முறைப்படிப் பெற்றுக்கொண்டு ஸ்ரீ பத்மநாபதாஸனாக விளங்கினார். மாலையில், முடிதரிக்கையின் தர்பார், 'புத்தன் கச்சேரிக்' கட்டிடத்துள்ள அழகிய தர்பார் ஹாலில் சிறப்பாக நடைபெற்றது. 'பொளிடிகல் ஏஜெண்டு' மிஸ்டர் காட்டண், ஸ்ரீ சித்திரைத் திருநாள் இளவரசரை வரவேற்றுச் சிம்மாசனத்திற்கு அழைத்துச் சென்றார். பிறகு, கிரீடத்தை எடுத்து அவருடைய கையில் அர்ப்பித்தார். பாலனாகிய மகாராஜா குலசேகரப் பெருமாள்களுடைய பரம்பரையின் சிறப்பாயுள்ள மேன்மையுடனும் கருணைகூர்ந்து அழகிய நோட்டத்துடனும் சிங்காசனத்தில் எழுந்த

ருளி இருந்து கிரீடம் தரித்து இலங்கினார். வெடி குண்டுகளின் ஓசை, வாத்தியங்களின் ஒலி, குடிகளின் சந்தோட ஆரவாரம், இவைகளால் ஆகாயம் பூரித்தது.

'ஸ்ரீ மூலம் திருநாள் ஸர். இராமவர்ம மகாராஜா நாடு நீங்கியதினால், ஸ்ரீ பத்மநாபதாஸ-வஞ்சிபால-குலசேகர-கிரீடபதி-மன்னே சுல்த்தான்-மகாராஜராஜ-ராமராஜ-பகதூர்-ஷம்ஷேர்ஜங் மகாராஜா அவர்களை இராஜ்யத்திற்கு உரியவராக இந்தியா கவர்ன்மெண்டு சம்மதம் கொண்டிருப்பதனால்' பொளிடிகல் ஏஜண்டு, ஸ்ரீ சித்திரைத் திருநாள் இளவரசரைத் திருவிதாங்கூர் மகாராஜாவாக விளம்பரம் செய்தார். அப்பால், ஸ்ரீ சேது லக்ஷ்மிபாயி ஆற்றிங்ஙல் மூத்த ராணியாரை ரீஜண்டாக நியமித்திருக்கும் செய்தி வெளியிடப்பட்டது. பிறகு அவர், அந்த இராணியாருக்கும் மகாராஜாவின் தாயாராகிய ஸ்ரீ சேதுபார்வதிபாயி ஆற்றிங்ஙல் இளைய ராணியாருக்கும் 'மகாராணி' என்ற அடைமொழி அளித்திருக்கும் செய்தியையும் சபையோரைத் தெரிவித்தார். ஆட்சித் திறமையும், குடிகளிடத்து அன்பும், பொருள் வரவு தேடலிலும் சேர்த்தலிலும் காத்தலிலும் அறவழியில் செலவு செய்தலிலும் வல்லமையும், உலகத்திற்கு உயிரெனச் சிறப்பும், காலத்திற்கேற்ப உபாய அறி

வும், ஆராய்தலிலும் ஆராய்ந்து செய்தலிலும் மிடுக்கும் பெற்ற மாமனுடைய அறிவின் நுட்பமும் ஆழமும் மனோதிடமும் உறுதியான செய்கையுணர்வும், ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜாவினிடத்துத் தெளிந்து காணத் தொடங்கியிருப்பது நாட்டின் பெரும் பாக்கியமாகும், என்று மிஸ்டர் காட்டண் பிரத்தாபித்தார். மகாராஜாவுக்கும், எல்லாக் குணங்களும் உயர்ந்த கல்விப்பயிற்சியும் உலகச் செய்திகளில் சிறந்த அறிவும் வாய்ந்த தாயாருடைய சோம்புதலற்ற அன்பார்ந்த போதனைகள் கிடைத்து வருவது அதிலும் பெரும் பாக்கியம் என்ற உண்மையையும் வஜண்டவர்கள் எடுத்து விளக்கினர். திருவிதாங்கூரில் வசிக்கும் குடிகளுடைய மாசற்ற இராஜபக்தியைப் பற்றியும் அவர் புகழ்ந்தார்.

இவ்வாறு ஆடிமாதத்தில் நேர்ந்த துன்பங்கள் ஆவணிமாதத்தில் பெற்ற மகிழ்ச்சியால் நீங்கின. விடர்ந்த பூக்கள் பொழிந்து போனால் உண்டாகும் வருத்தம் காய்களுண்டாகிப் பழமாகும் பொழுது மகிழ்ச்சியைக் கொடுப்பது போல ஸ்ரீமூலம் திருநாள் மகாராஜாவின் நாடுநீங்கலினால் நேர்ந்த வருத்தம், ஸ்ரீசித்திரைத் திருநாள் இளவரசர் அரசுரிமை பெற்ற பொழுது சந்தோஷமாக மாற்றம் கொண்டது. அவருடைய விடர்ந்த அறி

வும் பரந்த நோட்டமும் இயற்கையுணர்வும் புகழ் பெற்றனவே. ஸ்ரீ சேதுபார்வதிபாயி மகாராணி யார், அருமை மைந்தனுக்குக் கல்வி பயிற்றுவிப்ப தில் அசைவற்ற நோட்டம் கொண்டிருந்தார். மகா ராணியார் உலகச் செய்திகளைத் தொடுத்துச் சொல் லியும் கடுஞ் சொல்லை நீக்கி மகிழச் சொல்லி யும் மைந்தனுக்கு அறிவை ஊட்டி வந்தனர். கல்வியறிவை மேன்மேலும் அபிவிருத்தி பண் ணிக்கொள்ளவேண்டும் என்ற விருப்பம் மகாரா ஜாவுக்கு அதிகமாக உண்டாயிற்று. பல நூற்களை ஒருங்கே ஒருவரிடத்திற் பாடங்கேட்பது அறி வின் முதிர்ச்சிக்கு இசைவில்லாததால், மகாரா ஜாவுக்குக் கல்வி கற்பிக்கப் பல அறிஞர்கள் அமர்த்தப்பட்டனர். இவரது இயற்கையறிவையும் கல்விப் பயிற்சியாலுண்டாகிய செயற்கையறிவை யும் அறிந்து ஆசிரியர்கள் எல்லோரும் இவரிடம் அன்புடன் பழகிவந்தார்கள். எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணங்க ளையும் இலக்கியங்கள் பலவற்றையும் சாஸ்திர நூற்கள் முதலிய பிறவற்றையும் இவர் இளமை தொடங்கித் தக்க ஆசிரியர்களிடம் பாடங்கேட்டும் ஆராய்ந்தும் கற்று வந்தார். கல்வி விஷயமாகப் பலவாறு முயன்றார். கலைகளைத் தேடி யறியும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார். அவர் இருக்கும்

அரண்மனையில் புத்தகங்கள் ஏராளமாகச் சேமித்து வைக்கப்பட்டிருந்தன.

மலையாளமும் வடமொழியும் கற்பிக்கத் தேற்சியடைந்த வித்வான்கள் அமர்த்தப்பட்டனர். ஆங்கிலம் கற்பிப்பதற்கு ப்ரிட்டிஷ் உத்தியோகத்திலிருந்த டாட்வல் என்ற துரை நியமிக்கப்பட்டார். மூன்று வருடகாலம் அவர் அந்த வேலையைப் புகழத்தக்க நிலையில் நடத்திவந்தார். அதன் பிறகு மிஸ்டர் ஹார்வி ஆசிரியராக விளங்கினர். ஆங்கிலத்திலுள்ள இலக்கண இலக்கியங்கள், உலக சரித்திரம், இந்தியா சரித்திரம், பூமி நூல், பொருள் நூல், பிரகிருதி நூல், முதலிய நூற்களில் மகாராஜா வல்லவராக விளங்கினர். குதிரையேற்றம் பந்து விளையாட்டு முதலிய சரீரப் பயிற்சிகளிலும் தேற்சி பெற்றார். சிறு பிராயத்திலேயே அவருக்குத் தேச சஞ்சாரம் செய்வதில் அதிக ஆசை இருந்தது. 1103-ம் ஆண்டு அவர் தாயாருடன் சென்னை பட்டணம் பம்பாய் கல்கத்தா தில்லி முதலிய முக்கிய பட்டணங்களுக்குச் சென்றார். 1104-ல் இரண்டாவதும் கல்கத்தாவுக்கு எழுந்தருளினர்.

பதினாறு வயது நிறைந்ததும் மகாராஜா அறநூல்களையும் அரசாட்சி சம்பந்தமான பிறநூற்களை

யும் குற்றமறக் கற்றுத் தேர்ந்தார். இத்தகைய நூற்களைக் கற்பித்து வந்தது மிஸ்டர் பி. ஸி. தத்தர் என்ற ப்ரிட்டிஷ் உத்தியோகஸ்தர். மகா ராஜா தூரமான காலதேசங்களில் உள்ளவைகளைக் காணும் ஞானக்கண்ணையுடையவராக விளங்கி ஞர். கற்ருரோடும் உயர்ந்தாரோடும் பழக்க மும், குடிகளை நல்வழியில் நடத்தும் திறமையும், நல்லொழுக்கமும், ஊக்கமுடைமையும், சொல் வன்மையும், மடியின்மையும் அவர்பால் அமைந் துள்ளதைக் கண்டு உலகத்தார் இன்புற்றனர். அதிக தாமதமன்னியில், குடிகளுக்குத் தெய்வம் போன்ற மகாராஜா பங்களூருக்கு எழுந்தருளி ஞர்.

உழவரும் தொழில் செய்வோரும் அறிவோ ரும் செல்வரும் கூடி வாழும் மைசூர் நாட்டில் மகா ராஜா ஒரு வருடகாலத்திற்கு மேற்படவே எழுந்த ருளி இருந்தார். நோயில்லாமையும் இன்பமும் காவலும் பொருந்திய அந்நாட்டிலுள்ள ஆட்சி முறைகளை மட்டுமல்ல, நகரங்களுடையவும் கிரா மங்களுடையவும் அமைப்புத் தன்மைகளையும், குடிகளின் மரபுவழக்கங்கள் முதலிய பலவற்றையும் அவர் நன்கு தெரிந்து கொண்டார். மைசூர் மகா ராஜா அவர்களுக்கு இவர்மாட்டு மிகுந்த மதிப்பும் அன்பும் இருந்தன. இரண்டு மன்னர்களும்

நெருங்கிய நண்பர்களானார்கள். பிறகு, ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா மைசூரில் நின்றும் ஸிம்லாவுக்கு எழுந்தருளினார். அங்கு வைஸ்ராய் அவர்களைச் சென்று கண்டார். அப்பால், பூமிபாரம் நடத்துவதற்குரிய அதிகாரத்தை ஏற்கும் பொருட்டு அவ்விடம் விட்டுத் திரும்பலானார். சொந்த நாட்டை அடைந்ததும் இன்பமார்ந்த குடிகளின் கூட்டங்கள் வாழ்த்துப் பத்திரிகை சமர்ப்பித்து மகாராஜாவை உபசரித்தன.

இராஜாதிகாரத்தை வழங்கும் விழா 1107-ம் ஆண்டு அற்பசி மாதம் 20-ம் தேதி ஆடம்பரங்களுடன் அதிவிமரிசையாகக் கொண்டாடப்பட்டது. மகாராஜா, பழைய வழக்கப்படி, காலையில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பத்மநாபப் பெருமாளைச் சென்று வணங்கினார். மாலையில் தர்பார் நடைபெற்றது. 'புத்தன் கச்சேரி' யும் அதைச் சூழ்ந்த இடங்களும் அழகுடன் இலங்கின. மனங்கவரும் சொக்காகளை அணிந்த சேனைக்கூட்டமும், குதிரைப்பட்டாளமும், பொன்மயமான நெற்றிப்பட்டமும் அம்பாரியும் உடைய யானைகளும், தர்பார் விழாவின் அழகையும் மேன்மையையும் விளக்கின. 'ஸ்களட்டு' களுக்கும் 'கெரல்கைடு'க்கும் கச்சேரி மைதானத்தில் தகுந்த இடங்

கள் அளிக்கப்பட்டன. தர்பார் விழாவைக் காணக் குடிகளுக்காக அமைத்த இடத்திற்கு அவர்கள் தடையின்றிச் சென்றார்கள். அழைப்பின்படி வந்தவர்களுக்கு அவரவருடைய நிலைமைக்கிசைந்தவாறு இடங்கள் அளிககப்பட்டன. பிரஜைகள் மகாராஜாவின்வரவைக்கண்டு மகிழ வழிமேல் விழி வைத்தவண்ணமாய் நின்றார்கள். சிறிது நேரத்தில் மகாராஜா இளையராஜாவுடன் எழுந்தருளினர். திவானும் சேனைத்தலைவரும் இரண்டு பேர்களையும் வரவேற்றார்கள். பட்டாளங்கள் உபசாரங்கள் செய்தன. இருபத்தியொன்று உபசாரகுண்டுவெடிகள் மகாராஜா எழுந்தருளிய செய்தியை உச்சத்தில் உணர்த்தின.

மகாராஜா தனது சிம்மாசனத்தின் அருகில் சென்று ரீஜண்டு மகாராணியாரைக் கண்டு வெகுமதித்த பின் சிங்காசனத்தில் ஏறி அமர்ந்தார். மணி நாலு அடித்ததும் கவர்ணர் ஜனரலின் ஏஜண்டு மிஸ்டர் ப்ரிச்சார்டு தர்பார் ஹாலில் வந்து சேரவும், இளையராஜா அவரை வரவேற்றுபசரிக்கவும் செய்தார். மகாராஜா ஹாலின் நடுவில் வைத்து அவருக்கு நல்வரவு மொழிந்தார். பிறகு ஏஜண்டுடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். அப்பால் ஏஜண்டு வைஸ்ராயியின் 'கரீதா'வைத் திருக்கையில் அளித்தார். அது அக்கூட்டத்தில்

வாசிக்கப்படும் பொருட்டுத் திவானுடைய கையில் கொடுக்கப்பட்டது. சபையோர்கள் எல்லோரும் எழுந்து நின்றார்கள். திவான் அதைப் படித்தார். கரீதாவில் திருவிதாங்கூர் அரச குலத்தின் மேன்மையும் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜாவினிடத்து கவர்ணர் ஜனரலுக்குள்ள உண்மையான வெகுமதிப்பும் அன்பும் விளக்கப்பட்டிருந்தன. அது கீழ்வருமாறு:—

" ஸ்ரீ பத்மநாப தாஸ-வஞ்சிபால-இராமவர்ம-குலசேகர கிரீடபதி-மன்னே சுல்த்தான்-மகாராஜ ராஜ-ராமராஜ-பகதூர்-ஷம்ஷேர்ஜங்-திருவிதாங்கூர் மகாராஜா அவர்களுக்கு

உயர்ந்த குலத்தோரும் யாவராலும் நன்கு மதிக்கப்பட்டவரும் ஆகிய நண்பரே!

இந்த நல் வேளையில் தங்களுடன் ஒத்து மகிழ்வதற்காக யான் எழுதுவது வஞ்சகமற்ற உள்ளத்துடன் கூடியாகும். தங்களுடைய குடும்பத்துடன் எனக்குள்ள பற்றுதல் வெகுநாளாக நிலை பெற்று வருவதும், நான் தற்பொழுதுள்ள உத்தியோகத்தைக் கையேற்று அதிக நாள் செல்லும் முன் தங்களைக் கண்டு தலைமுறைத் தொடர்பாகவுள்ள எவ்வித உரிமைகளையும் ஏற்றுக் கொள்ளுவதற்குத் தங்களுக்குள்ள தகுதியைப் பற்றி நேரிட்

டறிந்து தீர்மானிப்பதற்கு எனக்குத் தருணம் நேர்ந்திருப்பதும் ஆகும். தங்களுடைய நாட்டில் ஆளுதற்குரிய அதிகாரங்களைத் தாங்கள் இப்பொழுது கையேற்பதைப் பற்றி ஐயமின்றித் தீர்மானிக்கும்படி யான் பெற்ற அறிவு அவ்வாறு மனநிறைவைக் கொடுத்தது.

தங்களுடைய முன்னோர்களால் மட்டுமல்ல, தாங்கள் இளமைப் பருவமடைந்திருந்தபொழுது மகாராணி ரீஜெண்டு அவர்களாலும் திறமையுடன் உயர்ந்த மாதிரியில் ஆளப்பட்டுவரும் ஓர் நாட்டின் ஆட்சிச் சுமையைக் கையேற்பதில் தாங்கள் பாக்கியமுடையவர்களே. மகாராணி ரீஜெண்டவர்களிடம் தங்களுடையவும் திருவிதாங்கூர் இராஜ்யத்தினுடையவும் கடப்பாடு எத்தகையதென்று எனக்கு வரையறுத்துச் சொல்வதற்கோ, தங்களுக்கு அதைத் தீர்த்துவைக்கவோ எளிதல்லவாயினும், மகாராணி ரீஜெண்டவர்களுடைய ஆட்சியொழிந்துள்ள வாழ்நாட்களில் அவருடைய பெருமையையும் நன்மையையும் காத்துக்கொள்வதில் தாங்கள் வேண்டியனவெல்லாம் செய்யக்கடவீர் என்று நான் தீர்மானம் கொண்டிருக்கிறேன்.

தாங்கள் ஏற்றுக்கொள்ளும் பொதுப்பொறுப்புக்களும் வேலைகளும் மிகப் பாரமுடையனவும்,

ஆட்சி முறைகளை நடத்தப் பொறுப்பேற்ற தங்களைப்போன்றவர்களுக்கு நேர்ந்திருக்கும் தொந்தரவுகளைக் கடந்து செல்ல ஊக்கம் பகுத்தறிவு மனவெழுச்சி முதலியவை இன்றியமையாதனவுமாகும். தங்களை நேரில் அண்டிவரும் பெரும் செய்திகளைத் தீர்ப்புச் செய்வதில் மேன்மையான பதவியைப் பெறுவதற்குத் தங்களுடைய மேம்பட்ட கல்வியறிவும் மிகுந்த பயிற்சியும் தங்களைத் தகுதியுடையவராகச் செய்திருப்பதும், இப்பொறுப்புக்களை நிறைவேற்றுவதில் எம்மிடத்திலும் எமது ஏஜண்டிடத்திலும் நின்று ஆதரவுற்ற போதனைகளையும் துணையையும் தாங்கள் எப்பொழுதும் எதிர்பார்க்கலாம் என்பதுமாகும்.

தங்களுக்கு ஆட்சியுரிமையை நேரில் அளிக்க, வேலைகளின் மிகுதியால் திருவிதாங்கூர் வந்து காணத் தருணம் வாயாமற் போனதில் நான் உண்மையாக வருந்துகின்றேன். ஆனல் மற்றொரு தருணத்தில் தங்களுடனும் தங்களுடைய நாட்டுடனும் உள்ள எமது பழைய நட்பின் ஏற்பாட்டைப் புதுக்கிக்கொள்ள இயலுமென்று நான் நம்புகின்றேன்.

தாங்கள் உயர்ச்சியையும் வெற்றியுடைய ஆட்சியையும் பெறுமாறு எனது உண்மையான கோ

ரிக்கைகளைத் தெரியப்படுத்தவும் நான் இத்தரு ணத்தை உபயோகப்படுத்திக்கொள்ளுகிறேன்.

தங்களிடத்து எமக்குள்ள வெகுமதிகளையும் ஆதரவுகளையும் வெளிப்படுத்தவும் நான் ஆசை கொள்ளுகிறேன்.

என்று தங்களது நம்பிக்கையுடைய நண்பர்,

நியூ டெல்ஹி,
1931, அக்டோபர்
30-ம் தேதி

வில்லிங்டண்,
வைஸ்ருயியும்
இந்திய கவர்னர் ஜெனரலும்."

இவ்வாறுள்ள வாழ்த்துரைகள் மகாராஜாவையும் சபையோர்களையும் இன்பத்தில் ஆழச் செய்தன. 'கீதா' படிக்கப்பட்ட உடன், பட்டாள வகுப்பைச் சார்ந்த பாண்டு வாத்தியக்காரர்கள் திருவிதாங்கூர் தேசீய கீதத்தின் முதல் ஆறு சரணங்களைப் படிக்க லாயினர். அப்பால் 31 ஆசார குண்டுகளும் அணிவெடியும் வைக்கப்பட்டன. அதன் பிறகு, மிஸ்டர் ப்ரிச்சார்டு இந்தியா கவர்ன்மெண்டின் விளம்பரத்தைப் படிக்க எழுந்தார். சபையோர் எல்லோரும் எழுந்து நிற்க, அவ்விளம்பரம் வாசிக்கப்பட்டது.

சடங்குகள் முறைப்படி ஒன்றென்றாக நடந் தன. பின்னர், மகாராஜாவும் மகாராணியாரும்

மிஸ்டர் ப்ரிச்சார்டும் இளையராஜாவும் திவான் முதலிய உயர்ந்த உத்தியோகஸ்தர்களும் மணி மாளிகையின் கீழுள்ள மண்டபத்தையடைந்தனர். அவ்விடத்தில் வைத்து மகாராணியாருடையவும் மகாராஜாவினுடையவும் விளம்பரங்களைப் படிக்க ஏற்பட்ட உத்தியோகஸ்தர்கள் அவைகளைப் படித்தார்கள். மகாராஜா அரசாட்சியை ஏற்றுக்கொள்ளுமாறு வெகுமானப்பட்ட வைஸ்ருயியும் கவர்ணர் ஜனரலும் தீர்மானித்திருப்பதால், மகாராணியார் தான் பழைய வழக்கப்படியும், ப்ரிட்டீஷ் கவர்ன்மெண்டின் உடம்பாடுடனும் ரீஜண்டு என்ற நிலைமையில் கையேற்று நடத்திவந்த அரசாட்சியை மகாராஜாவினிடத்தில் சேர்ப்பிப்பதாக வெளியிட்டனர். "நாம் இன்று அரசாட்சியை ஏற்றிருக்கிறோம்" என்று மகாராஜாவின் விளம்பரத்திலும் வெளியிடப் பட்டிருந்தது.

விளம்பரங்களை வாசித்த பின்னர், எல்லோரும் திரும்பவும் தர்பார் ஹாலுக்குச் சென்றார்கள். மகாராஜா இரண்டு பக்கங்களிலும் வணங்கி நின்ற சபையோர்களுடைய நடுவழியிற் கூடிச் சென்று சிம்மாசனத்திலும், ரீஜண்டு மகாராணியார் அதன் இடது பக்கத்தில் தயார் செய்திடப்பட்டிருந்த மற்றொரு ஆசனத்திலும் அமர்ந்தார்கள். பிறகு, மிஸ்டர் ப்ரிச்சார்டு எழுந்து நின்று இனிமையாகப்

பேசலானார். அவர் நாட்டின் தற்பொழுதுள்ள நிலைமையைப் பற்றி எடுத்துக் கூறினார். அவர் மகாராஜாவைப் பற்றிக் கீழ்வருமாறு மொழிந்தார்—"மகாராஜா சில நாட்களுக்கு முன் சொந்த நாட்டுக்கு எழுந்தருளிய பின்னர், குடிகளுக்கு வேண்டியவற்றைத் தெரிந்துகொள்ளுவதிலும் அரசாங்கத்தில் பற்பல வகுப்புக்களின் வேலைமுறைகளுடன் நேரில் பழகுவதிலும் காட்டி வந்த ஆவலை நான் நன்கு அறிந்ததுண்டு. மகாராஜா அவர்களின் முயற்சிக்கும் திறமைக்கும் குடிகளின் அன்பார்ந்த உடம்பாடு கிடைத்திருக்கின்றது. அவைகள் எல்லாவற்றையும் மேலுண்டாகப் போகும் நன்மைக்கு நற்குறியாக நான் கருதுகின்றேன். குடிகளுடையவும் நாட்டினுடையவும் மேற்செய்திகள் யாவும் அவருடைய பாதுகாப்பில் வந்தமைந்துள்ளன. அதனை—விலைமதிக்கக் கூடாத அந்த சொத்தை—நம்பிக்கையுடனும் கருதலுடனும் நடத்தி மேன்மேலும் செல்வச் சிறப்பை உயர்த்தி மேல்வரும் உரிமையாளர்களுக்கு அளிப்பதற்கும், பழைமை வாய்ந்து மேன்மை பெற்றிருக்கும் குலத்தின் பெருமையை வளர்த்துவதற்கும் அக்குலத்தின் பிரதிபுருடனாகிய மகாராஜா தயாருடையவர் என்பதை நான் அறிந்திருக்கிறேன். தலைமுறைத் தொடர்பின் பெருந் தன்மையை

அவர் புலர்த்தி வருவாரென்றும் நான் உறுதியாக எண்ணம் கொள்ளுகிறேன். ஐம்பது லட்சம் குடிகளுடைய இடையில் நன்மையும் இன்பமும் விளையச் செய்வதாயிருக்கும் அவருடைய இன்பம் என்ற எனது நம்பிக்கையையும் நான் வெளியிட்டுக் கொள்கிறேன்."

மிஸ்டர் ப்ரிச்சார்டின் சொற்பொழிவுக்கு மகாராஜா தக்க பதிலளித்தார். விரிவானதும் சுதேசப் பற்றை நன்கு விளக்குவதுமாகிய அவரது அழகிய மறுமொழி திருவிதாங்கூரின் மேன்மைக்கும் மேலுண்டாகும் நன்மைக்கும் நற்குறியாகத் தோன்றியது. மகாராஜா, திருவிதாங்கூர் அரசகுலமும் ஆங்கிலேயர்களும் ஒருவருக்கொருவர் இரண்டரை நூற்றாண்டுகளாக வளர்த்தி வரும் பற்றுதலும் துணைப்பேறும் எத்தகையதென முதன் முதலாகச் சபையோர்களுக்கு நினைவு படுத்தினார். பிறகு இவ்வாறு தொடர்ந்தார்.—"இதுகாறும் நமது நல்வாழ்வும் இன்பமும் செல்வமும் ஒரே மாதிரியாக இருந்தனவென்று திண்ணமாகக் கூறலாம். இப்பொழுதுள்ள இந்தியா வைஸ்ருயி என்பால் காட்டியுள்ள அதிக ஆதரவினாலும், அவருடைய சொந்த நிலையிலுள்ள நேசத்தாலும், போதனையாலும், இவ்வேற்பாடுகள் என்



ஸ்ரீ மார்த்தாண்ட வர்ம இளைய ராஜா



ஸ்ரீ கார்த்திகைத் திருநாள் இராணியாரும்
அவிட்டம் திருநாள் அரசிளங் குமாரரும்

லையொட்டிய மட்டிலும் அசைவற்ற நிலையைப் பெற்றிருக்கின்றன. அவரிடத்து நான் கடப்பாடுடையவனாக இருக்கிறேன். எனது ஆழ்ந்த மதிப்பையும் அன்பையுந் தாங்கள் வைஸ்ராயி அவர்களையும் அவரது மனைவியாரையும் தெரியப் படுத்தவும்.

நான் விருப்பமுடனும் தகுந்த பற்றுதலுடனும் கேள்வியுற்ற தங்களுடைய சொற்பொழிவில் எனது நாட்டுக்கு ஏற்பட்டிருக்கும் மிகுந்த வளர்ச்சியைப்பற்றித் தாங்கள் வெளியிட்டதுண்டு. எனது முன்னோர்களுடைய நுட்பமான முயற்சிகளாலும், தாங்கள் சொல்லியது போலத் திருவிதாங்கூரின் நன்மைக்காகவுஞ் செல்வத்திற்காகவும் முயன்ற எனது பெரிய தாயாராகிய ரீஜண்டு மகாராணியாரின் அன்பு நிறைந்த விருப்பத்தினாலும், இவ்வளர்ச்சி ஏற்பட்டதாகும். இப்பொழுது நான், கட்டுப்பாடுடையதும் நன்கு பாதுகாக்கப்பட்டுவருவதும் ஆகிய ஓர் சர்க்காரின் ஆட்சியைக் கையேற்கின்றேன். ஆனால், நான் அவ்வாறு செய்வது பொய்யான பற்றுதலாலோ மன நிறைவினாலோ அல்ல, மேன்மை பொருந்திய இவ்வாட்சி கிடைத்ததனாலுள்ள சுமதலையைப் பற்றிய நிலைபெற்ற நல்லறிவுடனாகும்.

இந்த நாட்டின் செல்வ நிலைமையைப் பற்றித் தாங்கள் சரியாகக் குறிப்பிட்டிருந்தீர்கள். சிற்சில துறைகளில் அதன் நிலைமை சரிவர அமைந்திருப்பினும், இயற்கையிலும் வளர்ச்சியிலும் எல்லா இடத்திலும் பரவும் மேன்மையேறிய இந்நிலைமையை இல்லாமற் செய்யும் வலிகளில் நின்று பாதுகாப்பையடைய இந்நாடு பாக்கியம் பெற்றிருப்பதாயினும், தற்பொழுதுள்ள நிலைமை பெரிய ஆத்திரத்தைத் தருவதாகவே இருக்கின்றது. ஆரவாரங்கள் ஒன்றும் இல்லாமல் இருப்பதும், பொருள் வருமான வழிகளை நோட்டமுடன் கட்டுப்படுத்துவதும் எனது உறுதியான கருத்தாகும் என்பதை நான் தங்களிடத்தும் தங்கள் வழியாக கனம் பொருந்தின வைஸ்ருயி இடத்தும் உறுதியாகச் சொல்லுவேன். திருவிதாங்கூர் மகாராஜாக்களும் இவ்வுண்மைகளையே பின்பற்றி வந்துள்ளார்கள் என்பதையும் வெளியிட்டுக்கொள்கிறேன்.

கல்வியிலும் ஆட்சியிலும் சட்டதிட்டங்களிலும் மற்று விதத்தில் நாட்டின் உயர்ச்சிக்குரிய எவ்வித முயற்சிகளிலும், இந்த நாடு அடைந்திருக்கும் ஈடற்ற மேன்மையைப் பற்றியும் தாங்கள் மொழிந்ததுண்டு. இந்நாட்டை இவ்வழியிலேயே மேன்மேலும் உயர்த்துவதற்குரிய

துணைபுரிவதற்கும், அது இனியும் பெருமையைப் பெற்று முன்னணியில் இடம்பிடித்துச் சிறப்புடையதாகத் திரவும் நான் ஓய்வின்றி மனமார்ந்து முயன்று வருவேன் என்பதைப் பிரத்தியேகமாகச் சொல்லவேண்டியதில்லை.

இந்தியாவின் தெற்கு இறுதியில் கிடப்பதும், இந்த பூகண்டத்தின் மற்றப் பக்கங்களில் நின்று பலவாறு மாறுதலடைந்ததும் ஆகிய திருவிதாங்கூர், அதற்கு எல்லா வித வளர்ச்சியும்—ஐம்பது லட்சம் மக்களும் சுமார் இரண்டரைக் கோடி வருமானமும் இருந்தும், அது பற்பல பெரும் சீர்திருத்தங்களை நடத்தியும், மேல் நடத்த வேண்டிய செய்திகளில் அதற்கு மிகுந்த விருப்பமிருந்தும், நமக்கு முறையுடன் எதிர்பார்க்கலாமென்ற மட்டில், இந்தியாவிலும் இங்கிலாந்திலும் அவ்வாறு நன்ருக அறியப்படவில்லை. ஜனக்கணக்கில் ஹைதராபாத் மைசூர் இந்நாடுகளைக் கடந்து நிற்கும் ஓர் இராஜ்யம் உறுதியுனுடம் ஐயமின்றியும் ஏற்றுக்கொள்ளப்படவேண்டும் என்று வேண்டிக் கொள்வது ஒழுங்கற்றதாகுமோ.

தங்களுடைய சொற் பொழிவில் வெளியிட்டிருக்கும் மனமார்ந்த கருத்துக்களுக்கு நான் தங்களிடம் மிகவும் கடப்பாடுடையவன். வைஸ்

ருயியின் பிரதிநிதி என்ற நிலைமையிலும், இந்தியா கவர்ன்மெண்டுடன் செய்யவேண்டிய கடித ஏற்பாடுகளை நடத்துவதற்குரிய இடையாளர் என்ற நிலைமையிலும், தங்களிடம் நான் கொண்ட பற்றுதல் கீழ் இருந்ததைப் போல எந்நாளும் நேசமுடையதும் அழகியதும் ஆயிருக்குமென்று எனக்கு நம்பிக்கையுண்டு.

இப்பொழுது இந்தியாவை நேரில் அணுகியிருக்கும் பல பெரிய செய்திகளும் உள. ப்ரிட்டிஷ் இந்தியாவுக்கும் நாட்டு இராஜ்யங்களுக்கும் மேல் உள்ள ஏற்பாடு எவ்விதம் வேண்டும் என்பது ஆராய்தலில் இருக்கின்றது. மிகவும் முக்கியமான இராஜ்யச் செய்திகளுடையவும் ஆட்சி முறைகளுடையவும் மாற்றங்களைப் பற்றியும் ஆராய்ச்சி நடைபெற்று வருகின்றது. இம்மாற்றங்களை நினைத்து, கனம். பொருந்திய வைஸ்ருய் அவர்களிடத்தும் தாங்களிடத்தும் யோசித்த பின்னர், எனது குலத்தின் நம்பிக்கையுடைய நண்பரான ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யரை, சட்டங்களைப் பற்றியும் ஆட்சியைப் பற்றியும் உள்ள செய்திகளில் எனது போதகராக அமர்த்தத் தீர்மானம் கொண்டிருக்கிறேன்.

மைசூர் மகாராஜா அவர்கள் சொந்த நிலைமையில் எனக்களித்த பேருபசாரத்திற்கும், நான் அந்த

நாட்டில் சென்று ஆட்சிமுறைகளைக் கற்று வரும் பொழுது அவரும் அவரது உத்தியோகஸ்தர்களும் எனக்கு ஓய்வின்றிச் செய்திருக்கும் அன்புற்ற உதவிக்குமாக, மகாராஜா அவர்கள்மாட்டு எனது அன்பார்ந்த நன்றியை இத்தருணத்தில் வெளியிட்டுக் கொள்ளுகிறேன். ப்ரிட்டிஷ் ஆட்சி முறைகளைத் தெரிந்துகொள்ள எனக்குத் தகுதியளித்ததற்காக, நான் மதறாஸ் கவர்ன்மெண்டுட னும் நன்றி பாராட்டுகின்றேன். மிஸ்டர் டாட் வெல்லினிடத்தும் எனது நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறேன். அவர் இன்று இங்கு வந்ததில் எனக்கு மிகுந்த சந்தோஷமுண்டு. ஆட்சி முறைகளைக் கற்க எனது ஆசிரியராக விளங்கிய மிஸ்டர் தத்தருக்கு, அவருடைய ஓய்வற்றதும் விலைமதிக்கப்படாததும் ஆகிய உதவிக்காக நான் எனது மிகவும் அன்பார்ந்த நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறேன்.

எனது குடிகளையும், அவரது வேண்டுகோளையும், அரசாங்கத்திலுள்ள பற்பல வகுப்புக்களின் வேலைமுறைகளையும் நேரில் தெரிந்துகொள்ள நான் கொண்டிருந்த விருப்பத்தைப் பற்றியும் தாங்கள் மொழிந்ததுண்டு. இது, நாள்தோறும் நடத்தும் வேலையாக அல்ல, கபடமின்றி இன்பமளிக்கும் வேலையாகவே எனக்குத் தோன்றியது. எனது

குடிகளின் இடையிலுள்ள எல்லா வகுப்புக்களு டையவும் அதன் உட்பிரிவுகளுடையவும் நேச மும் மதிப்பும் பெறுதற்கு, இறைவனருளால் எனக்கு உரிமையுண்டாக வேண்டும் என்பது எனது விருப்பம். எனது நோக்கமும் கருத் தும் அவர்களுடைய வாழ்க்கையின் முயற்சியில் நன்மையைத் தேடுவதில் ஆயிருக்கும். தாங்கள் உண்மையாக மொழிந்ததுபோல, எனக்குக் கிடைத்திருப்பது மிகவும் உயர்ந்த பொறுப்பாகும். குடிகளுக்குச் சமாதானம் இன்பம் நன்மை இவை களை வளர்த்துவதில் என்னால் இயன்ற அளவு முயன்றால் அல்லாமல் நான் அப்பொறுப் பைச் சரிவர ஏற்றதாக வராது என்பதையும் நான் உணருகிறேன். எனக்கு ஒருபொழுதும் சொல்லுக்கடங்காத மட்டில், அவ்வாறு நான் கடப்பாடுற்ற எனது தாயாரின் விருப்பங்களு டையவும் ஈடற்ற மேல்பார்வையுடையவும் விலை மதிப்பில்லாத நன்மைகள், எனது வேலைகளை நிறைவேற்றுவதில் எனக்குத் துணையாயிருக்கும் என்பது ஆறுதலைக் கொடுப்பதும், ஓர் பெரும் உரிமையும் ஆகும்.

ஓர் பூசொத்து ஜாம்மிய பாங்கைத் தொடங் கும்பொருட்டு அதன் முதற்பணமாக ஒரு லட்சம் ரூபாயும், காப்பாற்றுவோர் இல்லாதவர்களுக்கும்

உடம்பினுறுப்புகளில் சோர்வுடைய ஏழைக ளுக்கும் ஆக ஓர் அநாதைமனை நிறுவ அரை லட்சம் ரூபாயும் இத்தருணத்தின் நினைவின் பொ ருட்டு எனது சொந்தப் பொருளில் நின்று அளிக்க நான் தீர்மானித்திருக்கும் செய்தி மட்டுமே இனிச் சொல்லவேண்டியதாயிருக்கின்றது. பரந்த செய் கையுணர்வுடனும் உரிமைகளுடனும் நடந்துவ ரும் 'ஸ்ரீ மூலம் பிரஜாசபை'க்குச் சட்டத்தால் நிறுவப்பெற்ற ஓர் அடிப்படை இடுவதற்கும் நான் எண்ணம் கொள்ளுகிறேன். இவ்வெண்ணம் நிறைவேறுமாறு சீக்கிரத்தில் ஓர் அறிக்கை வெ ளியிடப்படும்.

இப்பொழுது என்மீது சுமத்தப்பட்டிருக்கும் பெரும் சுமதலைகளையும் கடப்பாடுகளையும் நிறை வேற்றும் பொருட்டு, எனக்கு ஊக்கமும் அறிவுந் திறமையும் அளிக்குமாறு எல்லாம் வல்ல இறை வனை வேண்டிக் கொள்ளுகின்றேன்."

மகாராஜாவின் இவ்வாறு சிறப்புடைய கருத் துக்களில் குடிகள் பற்றுதல் கொண்டார்கள். தலை முறைத் தொடர்பினுலும், பயிற்சியின் வன்மையா லும் முதிர்ச்சியுற்ற அவருடைய அறிவின் நுட்ப மும் ஆழமும் மேல் உண்டாகப்போகும் நன்மை யைக் குறிப்பித்தன.

தர்பார் நடந்த பின், அன்று இரவில், மகாராஜா கோட்டையினுள் இருக்கும் அரண்மனையில் நின்று 'கவடியார் குன்று' அரண்மனைக்குப் பொன்னுல் ஆக்கப்பட்ட தேரில் ஏறி எழுந்தருளினுர். இக்காட்சியைக் காண ஆயிரக்கணக்கான ஜனங்கள் வழியின் இரு ஓரங்களிலும் வரிசையாகக் கூடி நின்றனர். ஆடம்பரம் மிகுந்த அந்த யாத்திரை எல்லோருடையவும் உள்ளத்தைக் கவரச் செய்தது. படையாட்களின் அகத்தொண்டுடனும் அரசுக்குரிய எல்லா விருதுகளுடனும் மின்சார விளக்குகளால் அழகிய இராஜபாதையில் ஸ்ரீ பத்மநாபதாஸன் எழுந்தருளினுர். மகாராஜா, மிகுந்த அன்புடன் விளங்கும் குடிகள் வணக்கமுடன் கையைக் குவித்துக் கும்பிடுவதை ஆதரவுடன் பெற்றுக்கொண்டு கவடியார் குன்று அரண்மனைக்கு எழுந்தருளினுர்.

மறுநாள், மகாராஜாவின் வருடப்பிறப்பு விழா நடைபெற்றது. பற்பல கொண்டாட்டங்களினுல் திருவனந்தபுரத்தில் ஆடம்பரங்கள் நிறைந்தன. மகாராஜா அரசுரிமையைப் பெற்றவிழாவும், அவருடைய வருடப்பிறப்புவிழாவும் ஒன்றையொன்று தொடர்ந்து நடைபெற்றது. மகாராஜாவும், தாயார் மகாராணியார் முதலிய அரசகுடும்பத்தைச் சார்ந்தவர்களும் காட்சிப் பந்தலில் எழுந்த

ருளி, அங்கு வைக்கப்பட்டிருக்கும் அதிசயப் பொருள்களைக் கண்டு மனம் களித்தார்கள். நாட்டின் பல பக்கங்களிலும் தகுந்தவாறு கொண்டாட்டங்கள் நடந்தன. குடிகள் இவ்வாறுள்ள பாக்கியத்தின் தொடக்கத்தை அன்புடன் கொண்டாடினார்கள். குடிகளின் வகையாக மகாராஜாவுக்கு வாழ்த்துப் பத்திரிகையொன்று கொடுக்கப்பட்டது.

---

# அத்தியாயம் 4.

## ஆட்சியின் தொடக்கம்.

முன் கூறியவாறு, மகாராஜாவின் ஆட்சி மிக்க அழகுடன் தொடங்கிற்று. மகாராஜாவுக்கு இயல்பாகவுள்ள சுதேசப் பற்றும் குடிகளின் நன்மையில் நோக்கமும் எங்கும் வெளிப்பட்டன. மட்டுமல்ல, நுட்பமான உணர்வு, வல்லமை, எவ்விதச் செய்தியிலும் ஆழ்ந்த அறிவு முதலிய குணங்களைப் பெற்று ஈடற்றவராக விளங்கும் ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யருடைய போதனைகளாலுற்ற அனுகூலங்கள் மகாராஜாவுக்குக் கிடைத்தன.

குடிகளின் செல்வத்தைச் சிறப்பிக்குமாறு, மகாரா ஜாவின் கட்டளைகளைக் காலம் தவறாமல் நடத்த வல்லமை பெற்ற அமைச்சர்களும் உண்டானார் கள். ரீஜண்டு ஆட்சியில் திவானாயிருந்த திவான் பகதூர் வி. எஸ். சுப்பிரமணிய அய்யர், அவ் வாட்சி நிலைபெற்றும் கொஞ்சநாள் திவானாகத் தொடர்ந்தார். 1107-ஆமாண்டு மாசிமாதம் அவர் திவானுத்தியோகம் ஒழிந்தார். அதற்குப் பதிலாக மிஸ்டர் ஆஸ்டின் திவானாக அமர்த்தப்பட்டார். மிஸ்டர் ஆஸ்டின் திறமுடையவரும் நற்குணங் கள் பொருந்தியவரும் டம்பமின்றி வேலைநோக்கும் இயல்புடையவரும் ஆயிருந்ததால் குடிகளுக்கு அவரிடம் மதிப்பிருந்தது.

மிஸ்டர் ஆஸ்டின் ஆட்சிமுறைகளில் சில சீர்திருத்தங்களைச் செய்தார். சட்டசபையின் சீர் திருத்தம் அவைகள் எல்லாவற்றிலும் முக்கிய மானது. அன்றும் நமது நாட்டில் ஆட்சிச் செய்திகளை எடுத்துச் சொல்லும் பொருட்டு ஜனப் பிரதிநிதிகளுக்குப் பிரவேசமுள்ள இரண்டு சபை கள் இருந்தன. ஆனால் அதிகப் பழைமையும் அதிகாரங்களும் சட்டசபைக்கே இருந்தன. இச்சபை சட்டங்களை நிறுவுவதில் சர்க்காருக்குத் துணைபுரிந்து வந்தது. சட்டசபையிலுள்ளவர் களுக்கு 1095-ஆமாண்டு தொடங்கி அரசாட்சியின்

நன்மைதீமைகளை ஆராய்வதற்கும் உரிமை கிடைத்தது. மற்றொரு சபை ஸ்ரீ மூலம் பிரஜா சபையாகும். குடிகளுக்கு வேண்டியனவற்றைத் திவானிடம் நேரில் தெரியப்படுத்தவும், விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் ஜனப் பிரதிநிதிகளுக்கு இச்சபை கூடும்பொழுது சௌகரியம் வாய்ந்தது.

இந்த இரண்டு சபைகளும் ஒன்றுக்கொன்று எவ்வித ஏற்பாடுடனும் இருக்கவில்லை. சட்ட சபை ஆண்டில் மூன்று நான்கு தடவை கூடுவதுண்டு. பிரஜாசபை ஆண்டில் ஒரு தடவை நடைபெறும். மகாராஜாவுக்கு இச்சபை இரண்டினையும் கூட்டியிணக்கி வேண்டிய சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று முன்னமே அவா இருந்தது. அரசைப் பெற்று ஆண்டொன்று சென்றதும் இவ்விருப்பம் நிறைவேறியது. 1108-ஆமாண்டின் தொடக்கத்தில் இச் சபைகள் இரண்டும் சீர்திருத்தப்பட்டிருப்பதாக ஓர் அறிக்கை வெளியிடப்பட்டது. ஸ்ரீ மூலம் அசம்பிளியும் ஸ்ரீ சித்திரை ஸ்டேட் கௌன்ஸிலும் இவ்வாறு உண்டாயின. ஸ்ரீ மூலம் அசம்பிளியில் 72 சபையோர்கள் உள. 62 பேர்கள் அனுத்தியோகஸ்தர்களும் 10 பேர்கள் உத்தியோகஸ்தர்களும் ஆவர். அனுத்தியோகஸ்தர்களும் இரண்டு வகைப்படுவர். அதில்

பெரும்பாலரும் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே. அசம்பிளியின் தலைமை வகிப்பது திவான் ஆவர். ஆனால் திவான் வராத பொழுது சபையின் தலைமை வகிக்க ஒரு உப தலைவரைச் சபையோர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள்.

ஸ்ரீ சித்திரை ஸ்டேட் கௌன்ஸிலில் 37 உறுப்பினர்கள் உள. அதில் 27 அனுத்தியோகஸ்தர்களும் 10 உத்தியோகஸ்தர்களும் அடங்கியிருக்கிறார்கள். அனுத்தியோகஸ்தர்களில் ஐந்து பேர்கள் கவர்ன்மெண்டில் நின்று நியமிக்கப்படுகிறார்கள். பாக்கியுள்ளவர்கள் தேர்ந்தெடுக்கப்படுபவர்களே. கௌன்ஸிலின் தலைவரும் திவானே. கௌன்ஸிலுக்கும் அசம்பிளிக்கும் உள்ள தேர்ந்தெடுப்பு நான்கு வருடங்களுக்கு ஒரு முறை நடைபெறும். இச்சபைகளுக்குச் சட்டங்களை நிறுவவும், சர்க்காரின் வரவுசெலவுகளைக் கட்டுப்படுத்தவும், ஆட்சிமுறைகளில் கருத்துக்களை எடுத்துச் சொல்லவும் உரிமையுண்டு. ஆனால், நாட்டின் நன்மைக்கும் சமாதானத்திற்கும் இன்றியமையாததெனக் கண்டால் இச்சபைகளின் தீர்மானத்தைக் கடந்து செய்யவும் கவர்ன்மெண்டுக்கு உரிமையுண்டு.

குடிகள் சட்டசபைகளின் சீர்திருத்தத்தை இன்பமுடன் வரவேற்றனர். ஆனால், பிரதிநிதி

களைத் தேர்ந்தெடுப்பதற்குச் சட்டங்கள் நிறுவுவதைப் பற்றிச் சிற்சில பிணக்குகள் ஏற்பட்டன. சில சாதியார், தங்களுக்கு முறையாகக் கிடைக்க வேண்டும் உரிமை கிடைப்பதில்லையென்று ஆவலாதிப்பட்டனர். அவர்கள், தேர்ந்தெடுப்பில் பங்கு கொள்ளாமல் அகன்று நின்று கொண்டு ஆரவாரமிட்டனர். மிஸ்டர் ஆஸ்டின், அவர்களுடைய வழக்குச் சரியல்லவென்றும், தேர்ந்தெடுப்புக்குரிய சட்டங்கள் யாவும் முறையாகவே அமைந்துள்ளனவென்றும் பல தடவை வற்புறுத்தி மொழிந்தார். ஆயினும் சிலர் அதற்கிணங்காமல் வழக்கையே வளர்த்திக் கொண்டு ஒன்றிலும் சேராமல் மாறிச் சென்றார்கள். ஆனால், அவ்வாறு மாறிச் சென்ற பலரும் பிறகு தேர்ந்தெடுப்பில் நின்று சபைகளின் உறுப்பினர்களானார்கள்.

இச்சட்ட சபைச் சீர்திருத்தம் இந்தியாவில் மட்டுமல்ல, இங்கிலாந்திலும் மகாராஜாவின் பெருமையை உயர்த்தியது. சக்கிரவர்த்தி அவர்களின் அமைச்சர்கள்போலும் மகாராஜாவைத் துதித்து மொழிந்தார்கள். இத்தருணத்தில் மகாராஜா இங்கிலாந்துக்கு எழுந்தருளினார். அரசகுலத்தைச் சேர்ந்தவர்கள் ஐரோப்பாவுக்கு எழுந்தருளுவது நமது சரித்திரத்தில் முக்கிய நிகழ்ச்சியாகும்.

அங்ஙனம் முதலாவதாக ஐரோப்பாவுக்குச் சென்றவர்கள் ஸ்ரீ சேதுபார்வதிபாய் மகாராணியாரும் ஸ்ரீ கார்த்திகைத் திருநாள் அரசகுமாரியும் ஆவர்.

---

# அத்தியாயம் 5.

## மேலைநாட்டுச் சஞ்சாரம்.

பயனற்ற பழைய வழக்கங்களும் அவைகளைப் பின்பற்றும் மாந்தர்களின் நன்மை தீமைகளும் தற்கால நாகரீக முறைகளுக்கு இசைந்தனவல்ல என்று மகாராஜா, நன்கு அறிந்துள்ளார். கணம் தோறும் பெரும் மாற்றங்கள் நிகழும் இக்காலகட்டத்தில், பழைய வழக்கங்களையும் ஒழுக்கங்களையும் கண்மூடித்தனமாய்க் காப்பாற்றுவது கல்விநலம் பெற்ற அறிவாளர்களின் செயலாகாதெனவும் அவர், உணர்ந்தார். மகாராஜா, 1933-ஆமாண்டு ஏப்ரில் மாதம் 8-ஆம் தேதி, கார்த்திகைத் திருநாள் அரசகுமாரி, இளைய ராஜா, தாயார் மகாராணியார் முதலியவர்களுடன் பம்பாய் துறைமுகத்தில் நின்று ஐரோப்பாவுக்குக் கப்பல் ஏறினார். எல்லோரும் வழியிலுள்ள ஏடன், போர்ட்ஸெய்த், மார்ஸெயில்ஸ் முதலிய இடங்களில் இறங்கி அவ்விடங்

களைக் கண்ணுற்றனர். அவர்கள் ஐரோப்பாவி லுள்ள மிலான், வெனீஸ் முதலிய முக்கிய நகரங் களில் சஞ்சாரம் செய்துகொண்டு வியன்னு பட்ட ணத்தை அடைந்தார்கள். அங்கு சில நாட்கள் தங் கியிருந்தார்கள். ஐரோப்பாவில் தலைசிறந்து விளங் கும் பல அறிஞர்களும் அவர்களுடன் பழக்கம் கொண்டார்கள். அவர்கள் அதன்பிறகு, ஜூன் ஒன்பதாம் தேதி, பாரீஸ் நகரத்தை அடைந் தனர்.

நாகரீகத்திற்கும் உலக இன்பத்திற்கும் சிறந்த இடமாகிய அந்நகர் எவ்வாற்ருலும் அழகியது. அங்கு தங்கிவந்த பல அரசர்களும் இவர்க ளுடைய நட்பைப் பெற்றனர். மைசூர் இளவரசரும், நேப்பாள் அரச குமாரனும் அங்கு நடைபெற்ற விருந்தில் மகாராஜாவின் விருந் தினராக வந்திருந்தார்கள். பிறகு, இவர்கள் அவ் விடம் விட்டுச் சென்று, ஜூன் 24-ஆம் தேதி லண் டனில் எழுந்தருளினர்கள். லண்டனில் இவர்க ளுடைய வரவு, மிகப் பெருமையுடைய பல நிகழ்ச் சிகளும் நடைபெற்ற தருணத்திலாகும். சர்வ லோகப் பொருளாதாரக் கழகக்கூட்டம், இந்தியா வில் மேல் ஏற்படுத்தப்படும் ஆட்சி முறையை ஆராய்வதற்குரிமைப்பட்ட பார்லிமெண்டு கம்மிட் டியுறுப்பினர்களின் கூட்டம், முதலியன அன்று

நடைபெற்றன. மகாராஜா லண்டனில் வைத்து நடத்திய விருந்தில் இந்தியா ஸிக்ரட்டரி ஸர். ஸாமுவல்ஹோர், பார்லிமெண்டு கம்மிட்டியுறுப்பினர்கள், லார்டு சான்ஸலர் முதலிய அறிஞர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். இந்தியா ஸிக்ரட்டரி திருவிதாங்கூரையும் அதன் ஆட்சித்தலைவரையும் வெளிப்படையாகத் துதித்தார்.

இவர்கள், லண்டனில் சக்கிரவர்த்தி அவர்களாலும் அவரது மனைவியாராலும் தகுந்த மட்டில் சீராட்டப்பட்டார்கள். சக்கிரவர்த்தி அவர்களால் விண்ட்ஸர் அரண்மனையில் சர்வலோகப் பொருளாதாரக்கழக அங்கத்தினர்களையும், அன்று இங்கிலாந்தில் தங்கியிருந்த இந்திய நாட்டரசர்களையும் சிறப்பிக்கும்பொருட்டு நடத்தப்பட்ட விருந்தில் மகாராஜா அவர்களும் அவரைச் சார்ந்தவர்களும் விருந்தினராகக் கனிவுடன் வரவேற்கப்பட்டனர். ப்ரிட்டிஷ் அரசியலில் தலைசிறந்து விளங்கும் பல பெரியார்களும் இவர்களிடம் நட்பைப் பெற்றனர். இவர்கள் பற்பல கழகங்களாலும், அரும்புகழ் வாய்ந்த பெரியோர்களாலும் பெருமையுடன் வரவேற்கப்பட்டு வாழ்த்தப்பட்டார்கள்.

மகாராஜா இங்கிலாந்தில் எழுந்தருளிய தருணம், இவ்விடத்தில் அசம்பிளியும் கௌண்ஸி



ஸ்ரீ பத்மநாபப் பெருமாள் கோயில்



"கவடியார் குன்று" அரண்மனை

லும் கூடியிணைத்த சபை முதன் முதலாக நடை பெற்றது. அதற்கு மகாராஜா அனுப்பிய எழுத்து எந்நாளும் மறக்கத்தக்கதன்று. நாட்டின் உயர்ச்சிக்காக மகாராஜாவின் முன்னோர்கள் பல்லாண்டுகளாக முயன்று வந்ததில், ஜனப் பிரதிநிதிகள் சட்டங்களை நிறுவுவதிலும், ஆட்சிச் செய்திகளைக் கவனிப்பதிலும் பெற்ற உரிமைகளைப்பற்றி அவ்வெழுத்தில் வரைந்திருந்தார். சபையோர்கள் அவ்வாறுள்ள, உரிமைகளை ஆதரவுடனும் துணைபுரியத் தயாருடனும் உபயோகப்படுத்துவார்கள் என்று நம்புவதாகவும் மகாராஜா எழுதலானார். அவர்கள் நாட்டின் நலத்திற்காக பட்சமுடன் முயலவேண்டும் என்று மகாராஜா விரும்புவதையும் அவ்வெழுத்து வெளியிட்டது. 'சாதியும் மதப்பிரிவும், நாட்டின் நன்மைக்கும், ஆட்சி புரிவதற்கும், குடிகள் ஒருவருக்கொருவர் பெறும் நட்புக்கும் இடையூறாகத் இரக்கூடாது; பயிர்த் தொழில் செழிக்க வேண்டும்; மற்றத் தொழில்கள் முன்னேறவேண்டும்; குடிகளின் நலம் வளரவேண்டும்; கவர்ன்மெண்டின் கடமைகளை இவ்வாறாக நிறைவேற்ற வேண்டும்; கவர்ன்மெண்டின் முக்கிய நோக்கங்களும் இவைகளே' என்று இவ்வாறுள்ள உண்மை மொழிகளால் அவ்வெழுத்து உயிர்பெற்றிருந்தது.

ஜூலை ஐந்தாம் தேதி இவர்கள் லண்டனில் நின்று பயணமாகத் திரும்பலானார்கள். இவர்கள் ஐரோப்பாவில் இயற்கையழகு வாய்ந்த பலவிடங்களையும் கண்ணுற்றனர். தற்கால நாகரீகம் தழைத்த மேல்நாட்டு நகரங்களையும், சரித்திரப் புகழுடைந்த பற்பல இடங்களையும், மற்ற சிறந்த இடங்களையும் சென்று கண்டனர். ஜர்மன் தலைநகரான பெர்ளினில் வைத்து முன் அரசுக்குரிமையுடைய அரசகுமாரன் இவர்களை வரவேற்று உபசரித்தான். இவர்கள் 'ஸர்வ இராஜ்ய நேசசபை'யின் தலையிடமான ஜினீவாவுக்கும் சென்றிருந்தனர். அதன் பிறகு, ரோமில் எழுந்தருளி 'மார்ப்பாப்பா' அவர்களைச் சென்று கண்டார்கள். மகாராஜாவின் ஆளுகையின் கீழ் எல்லா மதத்தினர்களும் அவரவர் விருப்புவதுபோல அவரவர்களுடைய மதக் கொள்கைகளை அனுசரித்து நடக்க அனுவதிக்கப் பட்டிருக்கிறார்கள் என்றும், எல்லா வகுப்பினர்களுக்கும் முறைப்படி எவ்வித நன்மைகளும் கிடைப்பதுண்டென்றும் அறிந்த மார்பாப்பா அவர்கள், தங்கத்திலும் வெள்ளியிலும் அமைத்த முத்திரைகளை மகாராஜாவுக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் பரிசாக அளித்தார்.

இவ்வாறு பல நிகழ்ச்சிகள் நிறைந்த மேல்நாட்டுச் சஞ்சாரத்தால் திருவிதாங்கூரின் பெருமை

உலகத்தின் பல பாகங்களிலும் மிகப் பரவியது. நமது நாட்டின் மேன்மை நாள்தோறும் வளர்ச்சியுற்றது. கல்வி, வர்த்தகம், நோயின்மை, நகர அமைப்பு, நகர ஆட்சி என்றிவ்வாறுள்ள பற்பல விடயங்களிலும் நுட்பமான அறிவைப் பெறவும் மகாராஜாவால் இயன்றது. இந்தியாவுக்குத் திரும்பிவந்த உடன் அவர்களுக்குப் பல இடங்களிலும் அன்பார்ந்த உபசாரங்கள் நடந்தன. மத்ராஸ் கார்ப்பரேஷன் கட்டிடத்தில் வைத்துப் பொது ஜனங்கள் இவர்களைச் சிறப்புடன் வரவேற்று ஓர் வாழ்த்துப் பத்திரிகையும் அளித்து உபசரித்தார்கள். மத்ராஸிலுள்ள கேரளீய சபை, நம்பூதிரி யோக க்ஷேம சபை, கர்கமேன் சமாஜம் தொடங்கியுள்ள பற்பல கழகங்களும் தகுந்த மட்டில் இவர்களைச் சிறப்புடன் உபசரித்து வாழ்த்துப் பத்திரிகைகள் அளித்தன.

ஆகஸ்டு மாதம் 27-ாம் தேதி, இவர்கள் திருவனந்தபுரம் செண்ட்ரல் றயில்வே ஸ்டேஷனில் எழுந்தருளினார்கள். ஐரோப்பாவிலும் மற்ற நாடுகளிலும் சஞ்சரித்த பின்னர் திரும்பி வந்திருக்கும் இவர்களைக் கண்டு மகிழும்பொருட்டு ஓர் பெருங் கூட்டம் அங்கு கூடி நின்றது. நாட்டின் பல பக்கங்களில் நின்றும் வந்து நிறைந்த ஜனக் கூட்டம் இன்பம் நுகர்ந்து மனம் மகிழ்வதை

இவர்கள் முகமலர்ச்சியுடன் கண்டு களித்தனர். குடிகள் மிகச்சிறப்புடன் இவர்களை வரவேற்றனர். மகாராஜாவினிடத்துள்ள அந்தரங்கமான பற்றுதலும், அவர் அடைந்த மேன்மையில் குடிகளுக்குள்ள இன்பமும், மற்றச் செய்திகளும் அடங்கிய ஓர் வாழ்த்துப் பத்திரிகை மிக்க வணக்கமுடன் அளிக்கப்பட்டது. பிறகு, மகாராஜா ஆட்சிச் செய்திகளில் முயலுவாராயினர்.

---

## அத்தியாயம் 6.

---

### பலவித விழாக்கள்.

1933-ஆமாண்டு டிஸம்பர் மாதம் இந்தியா வைஸ்ராய் வெல்லிங்டண் பிரபு அவர்கள் மகாராஜாவின் அழைப்பின்படித் திருவிதாங்கூருக்கு வந்தார். அவர் இதற்கு முன் இரண்டு தடவை இவ்விடம் வந்ததுண்டு. அவருடைய வரவையொட்டி வேண்டியனவெல்லாம் முன்னமே தயார் செய்யப்பட்டன. அவரிடத்தும் அவரது மனைவியாரிடத்தும் உள்ள மதிப்பின் அறிகுறியாக பற்பல வேடிக்கைகளும் கண்களைக் கவரும் காட்சிகளும்

அமைக்கப்பட்டன. அவைகள் 'அஷ்டமுடி'க் காயலில் தோணிவிளையாட்டு, 'கனகக் குன்று' அரண்மனையில் விருந்து, 'கதைகளி' ஆட்டம், நாடகம் முதலியன ஆகும். வைஸ்ராய் அவர்கள் விருந்தின்பொழுது, திருவிதாங்கூரையும் மகாராஜா அவர்களையும் இவ்விடத்து ஆட்சி முறைகளையும் பற்றி வெளிப்படையாக வியந்து புகழ்ந்தார். அவர், மேன்மேலும் நன்மையையே நாடும் மகாராஜாவின் ஆட்சிச் செய்திகள் யாவும் வெற்றியடையுமாறு, பற்பல சாதியாரும் பற்பல மதத்தைச் சார்ந்தவர்களும் ஆகிய மக்கள் சகோதரத் தன்மை பெற்று பற்றுதலுடன் செவ்விய முறையில் முயலவேண்டுமென்று குடிகளுக்கு அறவுரையாக அறிவித்தார். மகாராஜாவின் சட்டசபைச் சீர்திருத்தத்தில் குறுகிய நோக்கமுடன் ஒதுங்கி நின்றவர்களின் கதியை அவர் மிகவும் இகழ்ந்தார். அவர்களுடைய நெறி முறை வழுவிய பாழ் எண்ணம் நல்லதற்கல்லவென்றும் முன்னறிக்கை கொடுத்தார். வைஸ்ராய் அவர்கள் சட்டசபை மந்திரத்தின் அடிப்படைக் கல்லிடும் விழாவில் நடத்திய சொற்பொழிவில் இவ்விடத்தில் நடந்த சட்டசபைச் சீர்திருத்தத்தின் மாண்பினை மனமாரப் புகழ்ந்தார். பிரபு அவர்கள், மகாராஜா இரண்டு வருடங்களில் நாட்டில் செய்திருக்கும் பல சீர்திருத்தங்களிலும் அக

மகிழ்ந்து இவ்விடம் விடலானூர். வைஸ்ரூய் வந்ததின் ஓர்மையை நிலைநிறுத்தத் திருவனந்தபுரத்தில் குழாய் ஜல விதரண வகுப்புக்கு "வெல்லிங்டண் வாட்டர் வர்க்ஸ்" என்ற பெயர் இடப்பட்டது. வேலைகள் யாவும் முடிந்த பின், முதன்முதலாகக் குழாய் வெள்ளம் திறந்து விட்டது வைஸ்ரூய் அவர்களே. அதனால் அந்த வகுப்பு இப்பெயரைப் பெற்றது.

### i. 'பள்ளிக் கெட்டு'த் திருமணம்.

சில நாட்கள் சென்றதும், உள்ளம் கவருமாறு அழகிய காட்சிகளமைந்த ஓர் அடியந்திரமும் கொண்டாடப்பட்டது. மகாராஜா அவர்களுடைய இளைய சகோதரி ஸ்ரீ கார்த்திகைத் திருநாள் அரசகுமாரியின் 'பள்ளிக் கெட்டு'த் திருமணம் 1109-ாமாண்டு தைமாதம் மிக்க விமரிசையுடன் நடத்தப்பட்டது. மிகப் பழைமையும் பெருமையும் வாய்ந்த 'பூஞ்ஞார்' அரண்மனையைச் சார்ந்த மகாகனம் பொருந்திய பி. ஆர். கோதவர்ம ராஜா அவர்கள் அரசகுமாரியின் மணவாளராகத் தீர்மானிக்கப்பட்டார். மங்களமான இத்திருமண விழா பழைய வழக்கப்படியும் முன் நடப்புப்படியும் 'தேவாரத்து கோயிக்கலி'ல் நடைபெற்றது. அரசாளும் மன்னன் சொந்தத் தங்

கையின் 'பள்ளிக் கெட்டு'த் திருமணம் நடத்து வது இப்பொழுதுள்ள திருவிதாங்கூர் சரித்திரத்தில் முதலாவதாகும். ஆகவே இத்திருமணத்தில் அனைவரும் அதிக மனக்களிப்பை வெளிப்படுத்தினார்கள். எண்ணரும் நாட்டுமக்கள் திருவிதாங்கூரின் பல பாகங்களில் நின்றும் திருமண விமரிசைகளைக் கண்டு இன்பமடையத் தலைநகரில் வந்து கூடினார்கள். அதுபோல இராஜ்யத்தின் வெளியில் நின்றும் அறிவும் அருளும் பெற்ற ஆன்றோர்களும், செல்வம் மிகப் படைத்த சீமாட்டிகளும் வந்திருந்தனர். மகாராஜாவின் சொந்த அழைப்பின்படி சிறந்து வாழும் பலரும் திருமணச் சடங்கில் பங்கு கொண்டனர். இவர்களில், மைசூர் யுவராஜா, கொச்சி அரச குமாரர்களும் அரசகுமாரிகளும், ஸாண்டூர் ராஜா சாகிப் முதலிய பேர்கள் உட்படுகின்றனர். இந்தியாவில் தலை சிறந்த பெருமை வாய்ந்து விளங்கும் பலரும், அரசியற் பணிசெய்யும் முக்கிய ஐரோப்பியர்களும் வந்திருந்தனர். நாட்டுமக்கள் மணவாட்டியையும் மணவாளனையும் வாழ்த்திக்கொண்டு பற்பல விநோதங்களும் கண்களிப்பக் காணுதற்குரிய விசேடக் காட்சிகளும் நடத்தலானார்கள். மகாராஜா அவர்களால், சதிர்ப் பந்தலில் ஓர் வரவேற்பு தர்பாரும், 'சனகக் குன்று' அரண்மனையில் ஓர் விருந்தும், 'கவடியார் குன்று' அரண்மனை

யில் ஓர் உத்தியான விருந்தும் சிறப்பாக நடத்தப் பட்டன. திருவனந்தபுரம் பட்டணம் மின்சார விளக்குகளினால் அழகுடன் விளங்கியது.

'பள்ளிக் கெட்டு'த் திருமணத்தின் இறுதிச் சடங்கு பட்டாளங்களின் தொண்டுடன் நடைபெற்ற ஊர்க் கோலமாகும். தந்தத்தால் அமைத்த ஓர் பல்லக்கில் கண்களைக் கவர்ந்து குளிர்விக்கும் செழுமை வாய்ந்த கோலமுடைய ஸ்ரீ கார்த்திகைத் திருநாள் அரசகுமாரியும், பல்லக்கின் அண்மையில் அணி செய்து இலங்கும் உயரிய யானை ஒன்றின் மீது அமைத்த அம்பாரியில் கோதவர்ம மகாராஜா அவர்களும் விளங்கினார்கள். ஊர்க் கோலம் தேவாரத்து கோயிக்கலில் நின்று புறப்பட்டு 'மெயின் ரோடு' வழியாகத் 'தெக்கேத் தெரு'வில் வந்து சேர்ந்தது. எல்லா அரச ஆடம்பரங்களுடனும் நிகழ்ந்த இந்த ஊர்க் கோலம் காண்போரை வியக்கச் செய்தது. தெக்கேத் தெருவில், மணமாட்டியும் மணவாளனும் அவரவருடைய வாகனங்களில் நின்று இறங்கி மகாராஜாவை வணங்கினார்கள். பிறகு இவர்கள், 'தெக்கேத் தெரு' மைதானத்தில் நடைபெற்ற வாண வேடிக்கைகளை, மகாராஜாவுடனும் அரசகுடும்பத்தைச் சார்ந்த மற்றவர்களுடனும் கூடிக் கண்டு மனக் களிப்பையடைந்தார்கள். பிறகு சுமார்

ஒன்பது மணிக்கு மறுபடியும் ஊர்க்கோலமாகத் தேவாரத்து கோயிக்கலே அடைந்தனர். இத்து டன் 'பள்ளிக் கெட்டு' வரிசைகள் நிறை வேறின.

இவ்விழாவில் ஒரு செய்தி பிரத்தியேகமாக எடுத்துச் சொல்ல வேண்டியதுண்டு. இதற்கு முன் ஒரு பொழுதும் 'பள்ளிக் கெட்டு' சந்நிதானத்தில் அவர்ண இந்துக்களுக்குச் செல்ல உரிமை இருக்க வில்லை. ஆயின், நடுநிலைமையும், நாட்டு மக்களி டத்து எல்லையற்ற அன்பும் பெருகிய ஸ்ரீ சித்தி ரைத் திருநாள் மகாராஜா அவர்கள், பற்பல சாதி மதங்களில் உள்ள குடிகள் எல்லோருக்கும் ஒன்று போலச் சந்நிதானத்துக்கான உரிமையும் தகுதியும் அளித்தார். ஒவ்வொரு வகுப்பினருக்கும் ஒவ் வொரு நாளிலாக விருந்துச் சாப்பாடு அளிக்கவும் கட்டளை உண்டாயிற்று. முக்கிய உத்தியோகஸ்தர் களுக்கும் அனுத்தியோகஸ்தர்களுக்கும் சிறந்த மட்டில் விருந்து நடைபெற்றது.

'பள்ளிக் கெட்டு' நடைபெற்று ஒரு மாதம் சென்றதும், மிஸ்டர் ஆஸ்டின் திவானுத்தியோ கத்தில் நின்று பிரிந்து, ப்ரிட்டீஷ் உத்தியோகத் திற்குத் திரும்பிச் சென்றார். அவருக்குப் பதிலாக, மத்ருஸ் கவர்னருடையவும், இந்தியா வைஸ்ரா

யுடையவும் ஆட்சி சபைகளில் புகழுடன் அரசியற் பணி நடத்திப் பெயரெடுத்தவர். மகம்மது ஹபிபுல்லா திவானுக அமர்த்தப்பட்டார். அவர் இவ்விடத்தில் சுமார் மூன்று வருடகாலம் பழுதிலாச் சிறப்புடன் திவான் வேலை பார்த்து மகாராஜாவின் அன்பைப் பெற்றார். நல்நெறியைக் கடைபிடித்தவர். மகம்மதின் ஆட்சியில் பல சீர்திருத்தங்களும் நடைபெற்றன. அவைகளில் உத்தியோக மளிப்பதில் அனுசரிக்க வேண்டிய முறைகளைப் பற்றிய ஏற்பாடுகள் முக்கியமானவை.

## ii. உத்தியோகமளித்தல்.

செய்வன திருந்தச் செய்யும் பழக்கமுடைய மகாராஜா அவர்களின் ஆட்சியின் தொடக்கத்தில் உத்தியோகமளிப்பதில் அனுசரிக்க வேண்டிய முறைகளைப் பற்றி ஆராய்ந்து எழுதியனுப்பக் கம்மிட்டியொன்று ஏற்படுத்தப்பட்டது. இக்கம்மிட்டியாரின் கருத்துக்கள் ஆலோசனைக்காகச் சட்டசபையின் முன் வைக்கப்பட்டன. பிறகு, அவைகளை நடப்பில் கொண்டுவரவேண்டிய வழிகளைக் கூற நீதிமன்றத்தாரில் ஒருவர் அமர்த்தப்பட்டார். அவருடைய கருத்துக்களையும் அறிந்த பின்னர், அவைகளை முறையுடன் நடத்த கவர்ன்மெண்டு தலைப்பட்டது. இதன்படி நாட்டுமக்

களில் எவ்வகுப்பாருக்கும் ஜன சங்கியைக் கணக்கின்படியும் கல்வி யோக்கியதைப்படியும் உத்தியோகமளிக்கத் தகுதி உண்டாயிற்று.

சட்டசபைக்கு அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பதற்கு உள்ள சம்மத தான உரிமையை எளிதாக்கியது முக்கியமான மற்றொரு சீர்திருத்தமாகும். சில வகுப்பினர் தேர்ந்தெடுப்புச் சட்டங்களை மாற்ற வேண்டுமென்று முறையிட்டுக் கொண்டிருந்தார்களென்று இதற்கு முன் கூறியதுண்டு. திவான், அவர்களுடைய வேண்டுகோளை ஆதரவுடன் தீர்மானிக்க விருப்பமுற்றார். பல்லாண்டுகளாகப் பல சாதியாரும், குடிகளுடைய உரிமைகள் யாவும் பெறுவதற்கு வற்புறுத்திக் கொண்டிருப்பதிலும் கவர்ன்மெண்டின் நோட்டம் பதிந்தது. கொஞ்ச காலமாக, இந்தியா கவர்ன்மெண்டார், நாட்டு இராஜ்யங்களில் உள்ள பட்டாளங்களை ப்ரிட்டிஷ் பட்டாளத்திற்கு ஒப்பாகச் செய்யவேண்டுமென்றும் உபதேசித்துக் கொண்டிருந்தனர். ஆகவே, சீர்திருத்தங்கள் செய்யத் தருணம் வாய்ந்தது. காலத்திற்கிசைந்தவாறு சில மாற்றங்களும் இன்றியமையாதனவாயின. நெடுநாளாகக் காலாள் பட்டாளத்தில் நாயர்கள் மட்டுமே சேர்க்கப்பட்டுவந்தனர். இவ்வேற்பாட்டை மாற்றி மற்ற சாதியாரும் பட்டாளத்தில் சேரலாமென ஒரு உத்தரவுண்டா

யிற்று. க்றைஸ்தவர்களுக்கும் இவ்வகுப்பில் முன் இருந்ததை விட அதிக உரிமை கிடைக்க ஏற் பாடுண்டாயிற்று.

### iii. வெள்ளி விழா.

இந்தியா சக்கிரவர்த்தியாகிய ஜார்ஜு ஐந்தா மன் அவர்களுடைய ஆட்சியின் வெள்ளி விழா மிக்க விமரிசையாகத் திருவிதாங்கூரிலும் நடை பெற்றது. வெள்ளி விழா என்பது ஆட்சி தொ டங்கி இருபத்தைந்து ஆண்டுகள் நிறைந்ததற்கு அடையாளமாக நடத்தப்படும் கொண்டாட்டமா கும். மகாராஜா, நாட்டுமக்களுக்கும் அரசகுலத்திற் கும், அழியாப் பெருமையுடைய ப்ரிட்டீஷ் கவர்ன் மெண்டுடனுள்ள பழைய நட்புக்குத் தக்கபடி இவ்விழாவைக் கொண்டாட விருப்பமுற்றார். அதன்படி ஓர் 'விளம்பரம்' வெளியிடப்பட்டது. மனம் நெகிழ்ந்து மகிழ்வுற்ற குடிகள், உள்ளம் கொள்ள உணர்த்திய மகாராஜாவின் கொள்கையை ஊக்கமுடன் நிறைவேற்ற முயன்றனர். அவர்கள் 1936-ம் ஆண்டு மேமாதம் ஆறும் தேதி அவ்வி ழாவை மனக்களிப்புடன் கொண்டாட முற்பட் டனர். கோயில்களில் விசேட ஆராதனைகளும் மற்ற நல்வினைகளும் நடந்தன. கல்வி மண மறிந்துவரும் மாணவர், சக்கிரவர்த்தியுடையவும்

அவரது மனைவியாருடையவும் படங்களை யானைகளின் மீது அணிசெய்தமைத்து ஊர்க்கோலம் நடத்தினார்கள். ஏழைகளான குழந்தைகளுக்குச் சிறப்பாகச் சாப்பாடு அளிக்கப்பட்டது. சபைகள் கூடி அச்சபைகளில், அல்லும் பகலும் கண்ணும் கருத்துமாக நம்மைப் பாதுகாத்துவரும் ப்ரிட்டிஷ் சிம்மாசனத்தோடு குடிகளுக்குள்ள உறுதியானதும் கள்ளமற்றதும் ஆகிய பத்தியும் நம்பிக்கையும் அழுத்தமுடன் விரித்துரைக்கப்பட்டன.

தலைநகரில் இவ்விழாவைச் சிறப்புடன் நடத்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பட்டாள வகுப்பினரின் 'பரேடு'டன் கொண்டாட்டங்கள் தொடங்கின. மகாராஜாவைக் காக்கும் சேனையும் 'நாயர் ப்ரிகேடி'ன் இரண்டாவது வகுப்பும் மற்றும் விழாவில் பங்கெடுத்தன. மகாராஜா அவர்களும் அவரைச் சார்ந்தவர்களும் 'பரேடு' நடப்பதைக் காணச் சென்றிருந்தார்கள். சேனையின் ஆசாரங்களும் சடங்குகளும் நிறைவேறிய பின்னர் சக்கிரவர்த்தி அவர்களுக்கு 'சீயேர்ஸ்' கூறப்பட்டது.

மகாராஜா அவர்கள் அன்று மாலை நாலு மணிக்கு சக்கிரவர்த்தியின் பிரதி புருடரிடத்தில் நின்று 'கரீதா' வைப்பெற்றுக்கொள்ள ஓர் தர்பார் நடத்தினார். எல்லாவித அரச விருதுகளும்

புத்தன்கச்சேரி மைதானத்தில் விளங்கின. வைஸ்ரூய் அனுப்பிய 'கரீதா'வை ப்ரிட்டீஷ் பிரதிநிதி, தர்பாரில் வைத்து மகாராஜாவுக்கு வெளிப்படையாக அளித்தார். திவான் அவர்கள் அதை வாங்கிப் படித்தார். பட்டாள வகுப்பினர் 31 ஆசாரவெடிகுண்டுகள் வைத்தார்கள்.

மறுநாளாகிய ஏழாம் தேதியும் தர்பார் நடைபெற்றது. அதில் சக்கிரவர்த்தி அவர்கள் பரிசாக அனுப்பிய 'வெள்ளிவிழா மெடல்கள்' சிற்சில உயர்ந்த உத்தியோகஸ்தர்களுக்கும் அனுத்தியோகஸ்தர்களுக்கும் அளிக்கப்பட்டன. அன்றிரவு 'கனகக் குன்று' அரண்மனையில் ஓர் சம்ஸ்தான விருந்தும் நடைபெற்றது. மகாராஜா அவர்கள், ஆன்றோர்களால் புகழப்பட்ட ப்ரிட்டீஷ் கவர்ன்மெண்டுடன் நெடுநாளாகத் தொடர்ந்துவரும் நட்பைப் பற்றியும் மற்றும் தமது சொற்பொழிவில் செவ்வையாக எடுத்துக் கூறவும், புலவர் பாடிப் புகழமைந்த சக்கிரவர்த்தி அவர்களுக்கும் கலை நலம் வாய்ந்த அவரது மனைவியாருக்கும் நீடூழி வாழ்வும் நோயின்மையும் உண்டாகச் செம்மொழியால் வாழ்த்தவும் செய்தார். அன்பினால் அகம் மகிழ்ந்த ப்ரிட்டீஷ் பிரதிநிதி, தனது மறுமொழியில் வஞ்சி அரசகுலத்தின் இணையற்ற குணங்களைப் பற்றியும், ப்ரிட்டீஷ் கவர்ன்மெண்டுடனுள்ள

3111

உயரிய பெருமதி நட்பு முதலியவைகளைப்பற்றியும் தெளிவாகப் புகழ்ந்து கூறலானார்.

இவ்வாறு நாட்டில் பலவிதமாக இன்பம் பெருகி வந்தது. ஆயினும் சில துன்பங்களும் ஏற்படாமல் இருக்கவில்லை. 1110-மாண்டு ஆற்பசி மாதம் ஒரு தினத்தன்று இரவு ஸ்ரீ பத்மநாபப் பெருமாள் கோயிலில் தீ பிடித்தது. அதையறிந்து மகாராஜா அவர்களும் தாயார் மகாராணியாரும் இரவென்று அவ்விடத்தையடைந்து, படர்ந்து வரும் தீயைக் கெடுத்த ஊக்கமாகக் கட்டளையிடவும், தீயையும் புகையையும் எள்ளளவும் கருதாமல் எழுந்தருளி நின்று குடிகளைத் தீ கெடுக்கத் தூண்டவும் செய்தார்கள். இவர்களின் வரவினால் ஊக்கம் பெற்ற ஆட்களின் விடா முயற்சியால் நேரம் புலருவதற்கு முன் தீ கெட்டது.

அவ்வாண்டிலேயே தென் திருவிதாங்கூரில் மலைக்காச்சலும் 'அம்மை' முதலிய தொத்துநோய்களும் உண்டாகி ஆயிரக்கணக்கான மக்கள் மிகத் துன்பமுற்றனர். மகாராஜாவின் கருணை இயல்பு வெளிப்பட இது ஓர் தருணமாயிற்று. அவர் தாயார் மகாராணியாருடன், பிணி படர்ந்திருந்த இடங்களை அடைந்து நோயால் வருந்துபவர்களை நேரில் கண்டு அவர்களுக்குத் துணை

புரிய ஏற்பாடு செய்தார். நாட்டில் படர்ந்த பிணி யாவும் வெம்மை அரசனுடைய கருணைமழையால் ஆறுதலைப் பெற்றது.

## iv. அரச வெகுமதி.

ஆட்சித் தொடக்கத்திலேயே ப்ரிட்டிஷ் கவர்ன் மெண்டாரின் அன்பைப் பெற்ற மகாராஜா, ஆட்சி தொடங்கி மூன்று ஆண்டுகள் சென்றதும், நாட்டுக்குத் தொண்டு செய்யும் திறமறிந்த சக்கிர வர்த்தி அவர்களிடமிருந்து 'ஜி. ஸி. ஐ. ஈ.' என்ற பட்டத்தைப் பெற்றார். இவ்வளவு சிறு பிராயத்திலேயே இத்தகைய சிறந்த வெகுமதியைப் பெற்ற அரசர்கள் இலர். மகாராஜா இப்பட்டத் தைப் பெற்றதில் உள்ளம் களித்து எழுந்த நாட்டு மக்கள் வணக்கமுடனும் அன்புடனும் மகாராஜா வுக்கு வாழ்த்துப் பத்திரிகையொன்று அளித் தார்கள்.

## v. தேச சஞ்சாரம்.

மகாராஜா, 1111-ஆமாண்டு, இளையராஜா, தாயார் மகாராணியார், கார்த்திகைத் திருநாள் அரச குமாரி, 'க்யாப்டன்' கோதவர்மராஜா, முதலியவர் களுடன் டில்லிக்குப் புறப்பட்டார். அவ்விடத்தில் இவர்களுடைய வரவினால் பல சிறந்த செய்திகள்

நிகழ்ந்தன. சீலமே உருவாய மகாராஜாவுக்குச் சில முக்கிய சந்தர்ப்பங்களில் இந்திய நாட்டரசர்களின் தலைவராக விளங்கத் தருணம் வாய்ந்தது. மகாராஜா வைஸ்ராய்க்கும் கவர்ணருக்கும் சில அரசர்களுக்கும் 'டின்னர்' விருந்து முதலிய உபசாரங்களை நடத்தவும், அவர்கள் நடத்திய மறு உபசாரங்களைச் சந்தோஷமுடன் ஏற்றுக்கொள்ளவும் செய்தார்.

மகாராஜா அவர்கள், அவ்வாண்டிலேயே 'ஜி. ஸி. ஐ. ஈ.' என்னும் பட்டத்தை நேரில் கையேற்பதற்காக மறுபடியும் டில்லிக்குச் சென்றார். வழியில் பல இடங்களில் மகாராஜாவுக்குப் பலவித உபசாரங்கள் நடைபெற்றன. மகாராஜா, அவ்வெகுமதிகளையெல்லாம் ஏற்றுக்கொண்ட பின்னர், தாயார் மகாராணியாருடனும் பரிவாரங்களுடனும் டில்லியை அடைந்து வெகுமதிப் பட்டத்தைப் பெற்றுச் சில நாட்கள் அவ்விடத்தில் தங்கியிருக்கவும் பல கொண்டாட்டங்களில் பங்கு கொள்ளவும் செய்தார். அத்தருணத்தில், நரேந்திரமண்டலம் இந்திய நாட்டை விட்டுச் செல்லும் வெல்லிங்டண் பிரபுவுக்கும் அவரது மனைவியாருக்கும் ஓர் விருந்தளித்தது. முக்கிய அரசர்கள் பலரும் கூடினார்கள். அவர்களுக்கெல்லாம் பிரதிநிதி என்ற நிலைமையில் வைஸ்ராய் அவர்களுக்கு வாழ்த்துமொழி

கூறும் பொறுப்பு நமது மகாராஜாவுக்கே இருந்தது. மகாராஜா, பிரபு அவர்களுடையவும் அவரது மனைவியாருடையவும் நல்லொழுக்கங்களைத் துதித்து மொழிந்தார். செம்மை சான்ற அவரது மொழி எல்லோருடைய உள்ளத்திலும் நன்கு நிலைகொண்டது. மகாராஜா, வைஸ்ருயியின் நட்பு நாட்டு இராஜ்யங்களுக்குப் பெரிய அருளாகும் எனபதை வெளியிட்டார். அரசர்கள் எல்லோரும் நாட்டு இராஜ்யங்களுக்குப் பொதுவாக வேண்டியனவற்றைக் காத்துக் கொள்ள மனவேறுபாடின்றி ஒன்றுசேர்ந்து முயலவேண்டுமென்று வற்புறுத்தினார். மகாராஜாவின் சொற்பொழிவு கேட்போருக்குப் பெருமதிப்பை உண்டுபண்ணியது. வைஸ்ருய் தமது மறுமொழியில் மகாராஜாவின் மாசற்ற ஆட்சித் திறமையையும் அவருடைய பெருந்தன்மையையும், இன்பமார்ந்த மொழியில் எடுத்துக் கூறினார். டில்லியில் எழுந்தருளியிருந்த தருணம் நைஸாம் அவர்களுடனும் பிக்கானிர் மகாராஜாதிராஜா அவர்களுடனும் அதிக நட்பையடையத் தருணம் வாய்ந்தது.

மகாராஜா அவர்கள், வெல்லிங்டண் பிரபு விடைபெற்றுச் செல்லும்பொழுதும், லின்லித்கோ பிரபு வைஸ்ருய் பதவியைப் பெற்று 'சத்தியப் பிரதிக்ஞை' நடத்தும்பொழுதும் டில்லியில் சட்ட

சபை ஹாலில் சென்றிருந்தார். மகாராஜா ஸிம்லாவில் வைத்து லின்லித்கோ பிரபுவுக்கு ஓர் 'டின்னர்' விருந்து அளித்தார். அவ்விடம் விட்டுத் திரும்பும் முன் மகாராஜாவும் அவரைச் சார்ந்தவர்களும் பிக்கானீர் மகாராஜாவின் அழைப்பின்படி அந்த இராஜ்யத்திற்குச் சென்றார்கள்.

மகாராஜாதிராஜ கங்காஸிங்ஜி அவர்கள் அரசருக்குரிய எல்லா ஆடம்பரங்களுடனும் றயில்வே ஸ்டேஷனில் வந்து இவர்களை வரவேற்றார். இவர்களின் வரவையொட்டி அவ்விடத்தில் பெரிய சேனைக்காட்சி ஒன்று நடைபெற்றது. 1914-ம் ஆண்டில் நிகழ்ந்த ஐரோப்பா யுத்தத்தில் கடும் தொண்டு புரிந்து பெயரெடுத்த ஒட்டகச் சேனையின் அழகிய காட்சி கண்களைக் கவருவதாயிருந்தது. பிக்கானீரிலுள்ள ஆயுதசாலை இவர்களுக்கு அதிக வியப்பைக் கொடுத்தது. அந்த இராஜ்யத்திலுள்ள முக்கிய இடங்களைப் பார்க்கவும், அரசனுடையவும் குடிகளுடையவும் உபசாரங்களை முறையாகப் பெறவும் செய்த பின்னர், இவர்கள் டில்லிக்குத் திரும்பலானார்கள். பிறகு, ஹரித்வாரம் ஸிம்லா முதலிய இடங்களுக்கு எழுந்தருளினார்கள். ஸிம்லாவில் இவர்கள் லின்லித்கோ பிரபுவையும் அவரது மனைவியாரையும் சென்று காணவும்

அவர்கள் அளித்த விருந்தில் பங்குகொள்ளவும் செய்தார்கள்.

திருவிதாங்கூர் இராஜ்யத்தின் மேன்மையும் அரசகுலத்தின் பெருமையும், ஆட்சி புரியும் அரசனின் புகழும், உலகெல்லாம் பரவின. நாட்டின் பண்பினைப் பாரெங்கும் பரப்பிய பேரறிஞராகிய மகாராஜா 'சஹ்யமலையின் இப்புறம் பழைய முறையில் காலம் கழிப்பது சரியல்ல; இந்தியாவில் உயர்ந்த பதவியை அடைய முயலவேண்டும்', என்ற நன்னெறியைக் குடிகளுக்குத் தெரிவித்தார். மறுநாட்டார் நமது இராஜ்யத்தை வந்து காணவும் இவ்விடத்தில் விருந்துபசாரங்களைப் பெற்றுக் கொள்ளவும் ஆசை கொண்டனர். இப்பொழுது சில ஆண்டுகளாக இந்த இராஜ்யத்தை வந்து பார்த்து மனக்களிப்புடன் செல்லும் மகான்களும் மகதிகளும் கணக்கற்றிருக்கின்றார்கள். அவர்கள் எல்லோரும் இவ்விடத்துப் பெருமையைப் பற்றிக் கூறிப் புகழ்வதும் சொந்த இடங்களுக்குச் சென்ற பின்னர் நமது மகாராஜாவை மனத்தூய்மையுடனும் உண்மையறிவுடனும் வாழ்த்துவதும் இயல்பாகக் காணப்படுகின்றன.

---

# இரண்டாவது பாகம்.

## அத்தியாயம் I.

### க்ஷேத்திரப் பிரவேச விளம்பரம்.

பொதுநலம் பேணும் பெருமை வாய்ந்து, தமக்கென வாழாது பிறர்க்குரியவராய் வாழும், கற்றோர் யாவரும் அறியா அறிவினராகிய மகா ராஜா டில்லியில் நின்று திரும்ப எழுந்தருளிய பின்னர், ஆறுமாதக்காலம் ஸர் மகம்மது ஹபி புல்லா திவானாகத் தொடர்ந்தார். 1112 ஆமாண்டு புரட்டாசி மாதம் அவர் திவானுத்தியோகம் விட்டுச் சென்ற உடன், பொறுமையின் திருவுரு வாகிய,

"என்றும் நன்றே செய்தலும் வேண்டும்;
நன்றும் இன்றே செய்தலும் வேண்டும்"

என்னும் அறவுரையின் வழியில் நிற்கும் மதிநலத் தினையுடைய நீதிவழுவா நெறிமுறையாளராகிய ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யர், குற்றம் குறை களை நீக்கி அரசியல் நடாத்தும் மகாராஜாவுக்குச் சட்டங்களின் நுட்பங்களையும், அறிவு சான்ற

அரசியற் கொள்கைச் சிறப்புக்களையும் வழுவறக் கூறும் போதகர் என்ற நிலைமையை விட்டுத் திவானாயினர். மனத்திண்மையும் நல்லாண்மையும் ஊக்கமும் உடையவராய், செருக்கும் சிறுமையும் இல்லாது, குற்றமும் சீற்றமும் தன்னைச் சாராது, நல்லதும் அல்லதும் உணர்ந்து, இந்திய நாட்டரசர்க்கு அவரது பிறப்பிற்கும் சிறப்பிற்கும் பொருந்திய வண்ணம் ஏற்ற பொருள்களை ஏற்ற பொழுது எடுத்துரைக்கும் தன்மையும், சட்ட சபைகளிலும் மற்றைய சபைகளிலும் அரசாங்க முறைகளையும் தம் கருத்துக்களையும் தெளிவுடன் செம்மையாக உறுதிபெற்றுக் கூறும் சொல்வன்மையும் வாய்ந்து, இயற்கை நுண்ணறிவோடு செயற்கையாகிய ஏனைய நூலறிவும் அமையப் பெற்று, அரசர்களுக்கும் நாட்டிற்கும் உறுதி பயப்பனவற்றைத் தேர்ந்து கற்பிப்பவராய், குறை கேட்டு நிறை செய்யும் மனத்திட்பமுடையவராய், நனவிலும் கனவிலும் நாட்டின் நலத்தை நாடியவராய், அரசியற் பணிகளை எவ்வாற்றானும் பின்வாங்காது திண்ணமாய் முன்னின்று முயன்று முடிக்கும் மனவெழுச்சியுற்றவராய், அடக்கமுடைமை நல்லொழுக்கம் நடுநிலைமை பெருந்தன்மை முதலிய நற்குணங்கள் அமைந்து, உலகெலாம் புகழ்பெற்று, சிங்க நோக்குடன் விளங்கும் அறிஞரே ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யர்

என்பது யாவரும் அறிந்ததே. கற்றுணர்ந்த நல்லாராகிய இவர், திட்பநுட்பமாகப் பேசும் திறமை மிகப் பெற்றவர். அழகிய மலருக்கு மணமே சிறப்பாயிருத்தல் போல அறிவுடைய அமைச்சனுக்குப் பேசும் திறமை பெரும் சிறப்பன்றோ. பேசும் திறமையுடைய மந்திரியை வெல்லுதல் அரிதாமென்பது,

"சொலல் வல்லன் சோர்விலன் அஞ்சான்
அவனை இகல் வெல்லல் யார்க்கும் அரிது"

என்னும் குறளினால் தெள்ளென விளங்கும். திருமகட்கு உறைவிடமாய்த் திகழும் மகாராஜா, நற்றாமரைக் கயத்து நல்லன்னம் வந்தாற்போல், நீர்வளம், நிலவளம், மலைவளம், குடிவளம் என்னும் நால்வகை வளங்களும் பெற்றுப் பசியும் பிணியும் பகையும் இன்றிச் செல்வமும் நட்பும் சுரந்து விளங்கும் இத்திருவிதாங்கூர் இராஜ்யத்தில், அமைச்சராக வந்து அழகுடனமர்ந்த அவருக்கு, "ஸசிவோத்தமர்" என்ற வெகுமதிப்பட்டத்தை அளித்தார். வெகுமதிப் பட்டத்தைப் புனைந்துகொண்ட இவர்—நலமெலாம் ஒருங்கே அமைந்த இவர், நயம் கொழிக்கும் திவான் பதவியில் அமர்ந்ததும், நாட்டுமக்கள் அனைவரும், சமன்செய்து சீர்தூக்கும் கோல்போன்ற நடுநிலை வழுவாத பொது நீதியாளராகிய இவரிடமிருந்து பற்பல சீர்திருத்தங்களையும் நன்மைகளையும் எதிர்

பார்த்தார்கள் அவைகள் யாவும் விரைவினில் நடைபெற்றன. எல்லாம் வல்ல முழு முதற் பொருளாகிய இறைவனருளினாலும், மக்களின் அன்பினாலும், குடிகளின் நன்மையைக் கண்ணும் ஆவியுமாகக் கருதி வளர்க்கும் ஊக்கம் கொண்ட திவான் மனவெழுச்சியுடன் முயன்றதாலும், நினைத்ததிலும் விரைவாகப் பொதுநலம் பேணும் பான்மையுடைய அரசியற்பணிகள் முன்னேற்றம் அடைந்தன.

எத்திசையும் புகழ் மணக்க மந்திராலயத்தில் வீற்றிருக்கும் திவான், "நாட்டின் பெருமை நற்குடிகளாலாவது" என்பதனை நன்குணர்ந்து, நாட்டுமக்களுக்கு வேண்டியனவற்றை நுட்பமாக அறிந்து, பருவம் தவறாமல் அவரது வாழ்க்கையை மேன்மேலும் செம்மையாகச் செய்யத் தயாருடையவர் என்பதைக் கருணை உருவாய மகாராஜா நன்கு உணர்ந்தார். நன்மையைப் போற்றித் தீமையை அகற்றி மக்கள் வாழவேண்டும் என்பதன்றே அரசியற்பணிகளின் உட்கருத்து. நீதி நூல்களிலும் ஒழுக்கநூல்களிலும் வல்லவராகிய ஸர். இராமஸ்வாமி அய்யர் நாட்டின் நிலைமைகளை நன்றாகக் கண்டு முற்றிலும் தெரிந்து கொண்டார். பூமண்டலத்தைத் துளைத்து அதனப்புறமும் காண வலிமையுடைய அவர், குடிகள்பாலு

ள்ள ஏற்றக்குறைவுகளின் தீமைகளைத் தெளிவாகக் கண்டார். ஒப்பாரும் மிக்காரும் இன்றி உலகோர் போற்றும் உயரிய குணங்களுடன் விளங்கும் அவர், சுற்றுமுள்ள தொன்மை பெற்ற நிலைமைகள் மாறவேண்டுமாகில், இந்து சமுதாயத்தை அலங்கோலப்படுத்திவரும் தீண்டாமை என்னும் வழக்கத்தை வேருடன் பறித்தெறிய வேண்டுமென்று நினைத்தார். நுண்ணறிவாளராகிய மகாராஜா அவர்களும், நலமெலாம் ஒருங்கே பெற்றுவிளங்கும் ஸ்ரீ சேது பார்வதிபாயி மகாராணியாரும் வெகுநாளாக மனத்தில் கொண்டிருந்த கருத்தும் இதுவே. ஆகவே, சீரிய மெய்ஞ்ஞானம்பெற்ற ஸர். ஸி. பி., திவான்பதத்திலமர்ந்து ஒருமாதம் சென்றதும், குடிகளின் நலத்தைத் தன்னலம் போல் பேணிப் போற்றும் மகாராஜா அவர்கள், திண்ணிய மனத்தோடு அனைவர்க்கும் நினைப்பிற்கெட்டாத வியப்பினை அளிக்குமாறு நற்பயன் விளைக்கும் "க்ஷேத்திரப் பிரவேச" விளம்பரத்தை வெளியிட்டார். இந்த அறச்செயலால் அவருக்கு மிக்க புகழ் உண்டாயிற்று.

விழுமிய பண்பும், விளங்கிய அறிவும் பிறப்புரிமையாக வாய்க்கப்பெற்று முறைதவறாது அரசியல் நடத்தி மக்களைக் காப்பாற்றுவதனால் இறைவனோடு ஒப்பவைத்தெண்ணப்படும் மன்னவனாகிய

மகாராஜா, "பிறப்பினாலோ மரபினாலோ இந்துவாகிய யாதொருவனுக்கும் நம்முடையவும் நமது சர்க்காரினுடையவும் உரிமையின் கீழுள்ள கோயில்களில் செல்லவோ ஆராதனை நடத்தவோ இனிமேல் எவ்வித இடையூறும் இருக்கக்கூடாது" என்று மேன்மையுடைய அவ்விளம்பரத்தில் ஒப்புயர்வற்றிலங்கும் தம் கருத்தை விரித்துரைத்துள்ளார். இவ்விளம்பரத்தினால், வளர் மதியம் போல் வளர்ந்தோங்கி எங்கும் தன்னொளி பரப்பிய மகாராஜா, உலகுள்ளளவும் வாழையடி வாழையென வருகின்ற மக்களனைவர்க்கும் தமது வண்மையை அளித்துள்ளார்.

புலமை வாய்ந்த அறிஞர்கள், பல்லாற்றானும் பண்புற்று விளங்கும் இவ்விளம்பரத்திற்கு 'இந்துக்களின் அறநெறியாகிய செங்கோன்மையின் புத்தம் புதிய ஜாதக'மென்றும், 'திருவிதாங்கூரின் நற்காலத்தின் புதிய பிறப்பெ'ன்றும் பெயர் அளித்திருப்பதுண்டு அசோக சக்கிரவர்த்திக்குப் பிறகு இன்றுகாறும் பாரத நாட்டில் நிகழ்ந்த சமயச் சீர்திருத்தங்கள் எல்லாவற்றிலும் வைத்து இது எம்மருங்கும் பரப்பையும் சிறப்பையும் பெற்று முன்னணியில் நிற்கும் பெரும் சீர்திருத்தமாகும் என்று சரித்திர நூலாசிரியர்கள் முறையிடுகின்றனர். இது தீண்டாமை என்னும்

3111

கொடிய பேயை ஓட்டிய—நாட்டுக்கு அருந்தொண்டாற்றிய—குடிகளின் நலத்தை இடையறுது நாடிய—செங்கோல் வழுவாத அரசியல் நடத்துகின்ற—அதிகாரத்தை அறத்தின் வழிச்செலுத்தி நாடாளுகின்ற— அரசனது ஆணையாகும் என்று பாரத நாட்டரசர்களும், தலைசிறந்த அமைச்சர்களும், ப்ரிட்டீஷ் பிரதிநிதிகளாகிய பெரியார்களும், இவ்விளம்பரத்தின் மாண்பினைத் தெளிவாகப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள். இங்ஙனம் அனைவராலும் பெரிதும் பாராட்டப்பட்ட வாழ்த்துரைகள் யாவும் உண்மையை உணர்த்தும் மொழிகளன்றி மிகையாகா.

அறிவுடையாரைத் துணைக் கொண்டு, எண்ணிய நலம் வாய்ந்து, குடிகளைத் தன்னோடு இணக்கிக்கொண்டு அரசியல் நடாத்தும் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா அவர்களின் கருணை மழையால் வளர்ந்துவரும் பாக்கியம்பெற்ற நாட்டுமக்களுக்கு, நெறியற்ற பழைய வழக்கங்களில் மனம் எவ்வாறு புண்ணுற்றிருந்ததெனத் தெரிந்து கொள்ள எளிதன்று. கடுமையான சாதிவழக்கத்தின் கொடுமையால் குடிகளில் பெரும்பாலாரும் பலவாறு துன்புற்றிருந்தனர் முதியோர் போற்றும் தொன்று தொட்டு வழங்கிய சமய ஒழுக்கங்களும் நாளடைவில் மிகக் கெட்டுவந்தன. வேற்

றுமையில்லாச் சகோதரத்தன்மையைக் கடைபிடித்துத் தழைத்து வளர்ச்சியுற்ற இந்துக்களுடைய நெறி, அக்கருத்தை முற்றிலும் கவர்ந்து, சாதியாகும் பேயால் அழிந்து கெடத் தொடங்கிற்று. 'அவர்ணர்' 'ஸவர்ணர்' முதலிய பயனற்ற வகுப்புப் பிரிவுகள் ஏற்றத் தாழ்வுகளைத் தோற்றுவித்து மக்களில் ஒருவருக்கொருவருள்ள நட்புக்கு இடையூறுயின.

இதற்கு முன் 'ஸவர்ண' சாதியாருக்கு மட்டுமே கோயிலினுள் புகுந்து ஆராதனை நடத்த உரிமை இருந்தது 'அவர்ணர்' என்று விரித்துரைக்கப்படும் மரபினர் பலவாறுள்ள குறைகளையும் துன்பங்களையும் அனுபவித்து வந்தார்கள். சில சாதியாருக்குத் தீண்டாமை இயல்பாக இருந்தது. தீண்டாமையில்லா மற்றச்சில மரபினருக்கும் சிற்சில குறைபாடுகள் நேரிட்டுக்கொண்டிருந்தன. தீண்டாமையைப் பற்றிக் கூறியதனுல் தொடாமையை எடுத்துச் சொல்லவேண்டியதில்லையே தொட்டால் குளிக்கவேண்டும்; தீண்டினுல் குளிக்கவேண்டும்; என்று சமய ஏற்பாடும் முதுநெறியும் இருந்தன. தீண்டினுல் ஆண்டவன் வெறுப்பார் என்று சாதாரண மக்கள் குறுகிய நம்பிக்கைகொண்டிருந்தார்கள். இங்ஙனமுள்ள நிலைமையில், தீண்டாமை சாதியாரென்

னும் வகுப்பைச்சார்ந்த மக்களுக்குக் கோயில் களில் ஏறக்கூடாதென்று மட்டுமல்ல, அருகே கூடச் செல்லக் கூடாது என்றும் முற்கால வழக்கம் இருந்தது.

ஆனால், நாட்டில் பன்னாளாக மேலைநாட்டுக் கல்விப்பயிற்சி பரவியதன் பயனாக இந்நிலைமை கள் யாவும் மாற்றம் அடைந்தன. 'கீழ்சாதி'யா ருக்கு இராஜபாதைகளில் விருப்பம்போல் நட ந்து செல்லவும், கச்சேரிகளில் ஏறவும், கல்லூா ரிகளில் சேர்ந்து கல்வி பயிலவும் உரிமை ஏற் பட்டது. ஆயினும் வீடுகளிலும் கோயில்களி லும் நிலைபெற்றிருந்த சாதிப்பேய்க்கு அசை வொன்றும் ஏற்படவில்லை. கல்வியும் மனிதத் தன்மையும் உத்தியோகமும் புகழும் மிக ஓங்கி விளங்கியும், 'அவர்ணர்' கோயில்களில் ஏறக்கூடா தென்ற மடக்கொள்கை நிலைத்தே இருந்தது. நாட்டில், பணச்செழிப்பும் கல்விப்பயிற்சியும் சமு தாயவலியும் தலையெடுத்து விளங்கும் சிலமரபினர் இவ்வேற்றக் குறைவுகளை அகற்ற அதிக விருப்ப முற்றார்கள். அவரது சலிப்பற்ற வேண்டுகோள் கள் நிறைவுறாமையால், அவைகள் நாளடைவில் நாட்டில் குழப்பமாக மாற்றம் கொண்டன. நாயர்களும் க்ஷத்திரியர்களும் அந்தணர்களும் ஆகிய மனத்திட்பமுடைய பெரியார்களும் கூறி

நிற்காமல் அக்குழப்பத்தின் தலைவர்களாக விளங்கினார்கள். பத்திரிகைகளின் பக்கங்கள் யாவும் நியாயவழக்குகளால் நிறைந்தன. பெரும் கூட்டங்களில் சம்மதம்பெற்ற சமநிலைவேண்டுகோள் எங்கும் முழக்கம் கொண்டது. அதனிடையில், பழைய கொள்கைகளில் நம்பிக்கையுடைய ஒரு சாரார், "பழைய வழக்கங்களைக் கடந்து செல்லக்கூடாது; க்ஷேத்திரப்பிரவேச உரிமை கொடுக்கச் சர்க்காருக்கு அதிகாரம் இல்லை"; என்றிவ்வாறு அழுக்காறுடன் முறண்டினார்கள். அறிந்து செய்யவில்லையானால் சொல்லிச் செய்விக்கப்படும் என்ற நோக்கம், குழப்பக்காரர்கள்பால் காணப்பட்டது. இதற்காகவே ரீஜென்ஸி ஆட்சியில் வைக்கத்தில் 'சத்தியாக்கிரகம்' ஊக்கமாக நடந்தது. வைக்கத்துக்கோயில் பழைமையும் மிகத்தூய்மையும் வாய்ந்ததென்பது எங்கும் யாவரும் அறிந்ததே. குழப்பக்காரர்கள் அவ்விடத்திலேயே இச்சமநிலைப்பயனையடையுமாறு யத்தனிக்கவேண்டுமென்று தீர்மானித்தார்கள். பாரதமகாஜனசபையும் அதன் தலைவராகிய காந்தியும் 'சத்தியாக்கிரகம்' புரிய இசைந்திருப்பதாகவும் அறிவு கிடைத்தது. கோயிலின் வெளிநடையில் 'சத்தியாக்கிரகம்' தொடங்கப்பட்டது. வெயிலும் மழையும் கருதாமல் அவர்கள் சமாதானப்போர் நிகழ்த்தினார்கள். போலீஸார் தடுத்துக்கொண்டும் இருந்தார்கள். இங்ஙனம்

சில நாட்கள் சென்ற பின்னரும் அவாது விருப்பம் பயனடையவில்லை.

• •

இளமையிலேயே அறிவின் கொழுந்தெனச் சிறந்து விளங்கிய ஸ்ரீசித்திரைத் திருநாள் மகாராஜா அவர்கள், அரசாட்சியை ஏற்றுக் கொண்டது இத்தருணத்திலேயே. ஆட்சித் தொடக்கத்திலேயே அவருடைய உள்ளம், பள்ளத்திற் பாயும் வெள்ளம்போல் கீழ்சாதியாரிடம் அதிகமாகப் பாய்வதாயிற்று. முன்னாட்களில் 'அவர்ணர்' களுக்கு அரண்மனையிற் செல்ல உரிமை இருக்கவில்லை. மகாராஜா அவர்கள், கார்த்திகைத் திருநாள் அரசகுமாரியின்—அழகின் கொழுந்தெனத் திகழும் அந்நங்கையின்—பள்ளிக்கெட்டின் பொழுது எத்தகைய வகுப்பினருக்கும் பந்தலிற் செல்லச் சம்மதம் கொடுத்தார். இங்ஙனம் தீயவழக்கங்கள் ஒன்றொன்றாக அகற்றப்பட்டன. ஊக்கம் பெரிதும் உடையவராய்த் தான் எண்ணிய செய்தியை ஓயாது உலையாது சலிப்பின்றிச் செய்யும் மனஉறுதியுடையவராகிய மகாராஜா, நாட்டுமக்கள் அனைவர்க்கும் உள்ள உரிமைகளை வேற்றுமையின்றி ஒப்பாக நிறைவேற்றிக் கொடுப்பதில் அதிக நோக்கமுடையவர் என்ற உண்மை, எல்லோருக்கும் உள்ளம் கொள்ளாத சந்தோஷத்தைக் கொடுத்தது. இவ்வாறு நாள்தோறும்

வளர்ந்துவந்த சீர்திருத்தம் உயரிய நிலைமையைப் பெற்று மகிமை பெற்ற 'க்ஷேத்திரப் பிரவேச விளம்பர'மாக வெளியிடப்பட்டது.

இவ்விளம்பரம், உலகோர் செய்த உயர் தவப்பயனும் விளங்கும் மகாராஜா அவர்களின் வருடப்பிறப்பு நாளாகிய 1112-ஆமாண்டு அற்பசி மாதம் 27-ஆம் தேதி வெளியிடப்பட்டது. வருடப் பிறப்புவிழா நிகழ்ந்த வாரத்தில் நாடு எஞ்ஞான்றும் தெளிவாக விளங்கிற்று. நன்னகராகிய தலைநகர் செல்வச் சிறப்புடன் இணையற்று இலங்கியது. நலம் புலர்த்தும் இயற்கைத் திருமகளின் கட்டளையாலென்றபோல் இன்பமளிக்கும் தண்மையுடைய இளங்காற்று வானைத் தூயதாகச் செய்தது. வஞ்சிவேந்தனின் நாடு வியப்பின் நிலைக்களமாயிற்று; கலை மணக்கும் திருநாடாயிற்று. நாட்டுமக்கள், கூட்டம் கூட்டமாகப் பிறந்தநாள் விழாக்களில் சேர்ந்து மதிமறந்தவராகிக் காட்சிகளைக் கண்டு களிப்புற்றும், இசையுடன் பாடப்படும் பாடல்களைக் கேள்வியுற்றும், பற்பல வேடிக்கைகளில் ஆர்வமுற்றும், அருங்கலை விநோதங்களைக் கண்ணுற்றும் நேரத்தைப் போக்கினார்கள். ஆனால், எவருடைய பிறப்புநாள் பெரிய விழாவாகக் கொண்டாடப்பட்டதோ, திவ்யவடிவாகிய எவர், குடிகளின் துன்பத்தை ஒல்லும் வகையால் நீக்க

முன்னின்று முயன்றனரோ, அம்மகாராஜா, வடி வழகின் பெருமையுடன் இரக்கங் கொண்டவராகி வெகுநாளாகத் துன்புற்றிருக்கும் 'அவர்ணர்'களு க்கும் கீழ்சாதியாருக்கும் சமாதானமும் மனக்களிப் பும் அளிக்க விருப்பமுற்றவராகிக் 'கவடியார் குன்று' அரண்மனையில் எழுந்தருளியிருந்து நாட் டுக்குக் கடுட் தொண்டு புரிந்தார். வஞ்சிநாட்டின் அறநெறியை வளர்ப்பவரும் சிறந்த புகழடைந்த வரும் ஆகிய சேதுபார்வதிபாய் மகாராணியார், அன்பும் ஆதரவும் பெருக்கும் புன்சிரிப்பினால் அழகிய முகமலர்ச்சியுடன், அருமை மைந்தனின் அருகே எழுந்தருளி இருந்தனர். திவான் ஸசி வோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யர், உத்தியோகப் பொறுப்பின் உணர்வுடனும், அரச குடும்பத்தோடுள்ள நேசத்துடனும், வெகுமதிப்பு டனும் விளம்பரத்தைத் தயார் செய்து மகாராஜா வின் முன்னில் வைத்தார். அதில் ஸ்ரீபத்மநாபப் பெருமாளின் திருவருள்பெற்ற மகாராஜா சந்தோ ஷமுடன் கையொப்பமிட்டார். முன்னவன் அரு ளே முன்னின்றால் முடியாத பொருளுமுளதோ?

உலகநன்மைக்கு இவ்விளம்பரம் இன்றியமை யாததே. பாரதநாட்டில் எல்லா இடத்திலும் ஒரு விதத்தில் இல்லாவிட்டால் மற்றொரு விதத்தில் தீண்டாமை இருந்து வந்தது. இப்பொழுதும்

இருந்து வருகின்றது. ஆனால், நாட்டின் பெருமையை உள்ளவாறு உணரத் தகுதிவாய்யாத விவேகானந்தர் தொடங்கிய ஞானிகள், பாரத நாட்டின் தென்பாலமைந்த கேரள நாட்டைப் பித்தர்களின் நாடென்று இகழ்ந்திருப்பதுண்டு. அவ்வாறான கேரள நாட்டின் முக்கிய இடமாகிய திருவிதாங்கூரிலேயே ஆழ்ந்த அறிவின் அருளும், நியாய உணர்வும், ஆற்றலும் வடிவுபெற்று விளங்கின. எடுத்த பணியைத் தொடுத்து முடிக்கும் பெருமை பெற்ற ஸ்ரீபத்மநாபதாஸராகிய குலசேகரப் பெருமாள், உலகத்தையழிக்குமாறு வளர்ச்சியுற்று வந்த நஞ்சுமரத்தை இவ்வாறு வெட்டியெறிந்தார். அதனால் நாட்டின் புண்ணியம் மறுபடியும் நிறைவெய்பெற்றது. தொன்மையுடைய இந்துக்களின் அறநெறி, காத்தருளும் நாதனையடைந்து தெளிவு பெற்று இனிமையடைந்தது.

உலகரெல்லாம் இவ்விளம்பரத்தை அகமகிழ்ந்து வரவேற்கலாயினர். இந்துக்கள் மட்டுமல்ல, க்றைஸ்தவர்களும் முஸ்லீட்களும் அதை அகமகிழ்வுடன் போற்றினர். இவ்விளம்பரத்தின் பெருமையைக் கண்டு நெஞ்சம் தேறிய காந்தி, மற்றைய அரசர்களும் நாட்டுமக்களும் திருவிதாங்கூர் நடத்திய அருப்பணியைப் பின்பற்ற வண்டுவது ஏற்றதாகுமென்று பன்முறை வணக்

கமுடன் கைகூப்பிச் சொல்நயமுடனும் பொருள் நயமுடனும் உபதேசித்தார். மட்டுமல்ல, அவர் தீர்த்தயாத்திரையாகத் திருவனந்தபுரம் வந்து மகாராஜாவைக் கண்டு தனது சந்தோஷத்தை வியந்து வெளியிட்டார். ஆங்காங்கு ஒத்து மகிழும் குடிகளின் கூட்டங்களும், நன்றிசெலுத்தும் கடமையை வெளியிடும் வாழ்த்துப் பத்திரிகைகளும், மகாராஜாவின் சுதேசப்பற்று, ஊக்கம், இரக்கம், மனவெழுச்சி முதலிய நற்குணங்களைப் புகழ்ந்தன. சர்வகலாசாலைகள் மகாராஜா அவர்களுக்கும் சேது பார்வதிபாய் மகாராணியாருக்கும் வெகுமதிப் பட்டங்கள் அளித்தன. இவ்விரண்டு பேர்களையும் ஆதரித்து உபசரிப்பதில் இந்நாட்டு மக்களைப்போலவே மற்றவர்களும் விருப்பம் கொண்டார்கள். இவ்விளம்பரத்தின் ஞாபகத்தின் பொருட்டுப் பல பணிகளும் நேர்மையுடன் செய்யப்பட்டன.

முதன் முதலாகத் திருவிதாங்கூரில், குட்டநாட்டின் பொருள் செறிப்புக்கும் செல்வச்சிறப்புக்கும் பெயர் பெற்ற ‘மண்கொம்பு’ என்னும் இடத்தில் மகாராஜாவின் மேலுடம்பின் பதிமை நிறுவப்பட்டது. சென்னைப் பட்டணத்திலும் திருவனந்தபுரத்திலும் காணப்படும் கைவண்ணம் சிறந்த பதிமைகளும் இவ்விளம்பரத்தின் மகிமை

யையும், அதில் நாட்டுமக்களுக்குள்ள கள்ளமற்ற அன்பையும் நினைவுபடுத்தும் பொருட்டு நிறுவப்பட்டவைகளே. திருவனந்தபுரத்தில் பதுமைப் பீடத்தின் அடிப்படைக் கல்லிட்டது பிக்கானீர் மகாராஜாவும், பதுமையைத் திறந்து வைத்தது தோல்பூர் மகாராஜாவும் ஆவர். மத்ருஸ் கவர்ணர் சென்னை பட்டணத்தில் பதுமையைத் திறந்துவைத்துக்கொண்டு நடத்திய சொற்பொழிவில், முறைமை வழுவாமல் நாட்டிற்கு நல்லணியாக விளங்கும் மகாராஜாவின் நல்லொழுக்கம், மேன்மை, உதாரம் முதலிய குணங்களை ஊன்றிச் சொல்லி மனமுவந்து புகழ்ந்தார். மத்ருஸ் மாகாணத்தின் தலைநகராகிய சென்னைப் பட்டணத்தில் தமது பதுமையை நிறுவிக் காணும் பாக்கியம் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜாவன்றி மற்ற எந்த நாட்டரசர்களும் பெறவில்லை. அதுபோல, அரசு புரிந்துவரும் எந்த அரசனுடைய தாயாரும், ஸ்ரீ சேதுபார்வதி பாய் மகாராணியார் அடைந்திருப்பதுபோலப் புகழும் சிறப்பும் அடைந்ததில்லை. மகாராஜா அவர்கள் இவ்விளம்பரத்தை வெளியிடுவதற்காகவும், நலம் மலிந்த மக்கள் வாழும் நாட்டின் நன்மைக்குரிய மற்ற ஏற்பாடுகளுக்காகவும் செய்திருப்பதும் செய்து வருவதுமாகிய அறப்பணி முயற்சிகள் வெளிப்படையானவைகளே. அவைகளின்

உண்மைப் பொருளையறிந்த நாட்டு மக்கள் தலை குனிந்த வண்ணம், கல்லைப் பிசைந்து கனியாக்கும் கருணை வாய்ந்த தாயார் மகாராணியாரை வாழ்த்திப் போற்றி வருகின்றனர். விளம்பரத்தின் ஞாபகத்திற்காகப் பல பணிகளும் குடிகளால் நாட்டமுறச் செய்யப்பட்டிருக்கின்றன. மகாராஜாவின் புகழை வெளிப்படையாக நிலைநிறுத்தும் பொருட்டுள்ள பற்பல ஞாபகப் பணிகளில் வைத்து 'பட்ட'த்தில் 'துளஸீஹில்' பங்களாவில் கட்டப்பட்டிருக்கும் மந்திரம் முதன்மையாக நிலவுகின்றது.

இவ்விளம்பரத்தை வெளியிட்டு மூன்று மாதங்கள் சென்ற உடன், மகாராஜா அவர்கள் தாயார் மகாராணியார், இளையராஜா, அரசகுமாரி இவர்களுடன் சென்னைப் பட்டணத்திற்கு எழுந்தருளினார். அவர்களுக்கு, வழியில் ஒவ்வொரிடத்தும் இதற்கு முன் நடைபெறாத மட்டில் உபசாரங்கள் நடந்தன. மானிட வகுப்பின் மேன்மைக்கும் அன்னியோன்னிய நட்புக்கும் வேண்டிக் கடுந்தொண்டு புரிந்துவரும் மகாராஜாவைக் காண லட்சக் கணக்கான மக்கள் வந்து கூடி நின்றார்கள். சென்னைப் பட்டணத்தில் மிகச் சிறப்புடன் இவர்களுக்கு வரவேற்பு நடந்தது. அவ்விடத்துள்ள நகரசபை உறுப்பினர்களும்

மற்றக் கழகத்தார்களும் கைம்மாறு கருதாமல் மகாராஜாவுக்கு வாழ்த்துப்பத்திரிகைகள் அளித்தனர். பழைய வழக்கங்களும் தற்காலச் சீர்திருத்தங்களும் இசைந்து பாரதநாட்டில் முதன்மையாக விளங்கும் திருவிதாங்கூர் இராஜ்யத்தின் அரசரைக் கவர்னர் துரையும் சிறப்பாக உபசரித்தார். தொல்புகழ் வாய்ந்த மகாராஜா, சென்னைப் பட்டணத்தில் எழுந்தருளியிருந்த நாட்கள் ஒவ்வொன்றும் திருவிழாக்களாகச் சென்றன.

---

# அத்தியாயம் 2.

## கீழ்நாட்டு சஞ்சாரம்.

சென்னைப் பட்டணத்தில் நின்று திருவனந்தபுரத்திற்குத் திரும்ப எழுந்தருளிச் சில நாட்களுள், கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் எழில் நலம் வாய்ந்த மகாராஜா அவர்கள், தாயார் மகாராணியார், இளையராஜா இவர்களுடன் 'ஈஸ்டு இன்டீஸு'க்குப் புறப்பட்டார். 1937-ஆமாண்டு ஏப்ரல் மாதம் தலைநகரில் நின்று எழுந்தருளினார். கப்பல் கொளம்பையடைந்ததும்

ஆண்டுள்ள மக்கள் இவர்களை ஆதரவுடன் வர வேற்றனர். நானூறு ஆண்டுகளுக்கு முன் 'ஸிலோனி'ல் அரசியல் நடாத்திய வேந்தர்கள் திருவிதாங்கூர் மகாராஜாவுக்குக் கப்பம் செலுத்தி வந்தனர் என்பது சரித்திரப் புகழுடைந்த ஓர் உண்மை ஆகும். பிறநு கைவிட்டுச் சென்றதாயி னும், ஸ்ரீசித்திரைத் திருநாள் மகாராஜா அவர் கள், அன்று வலிமையால் தேடிய அம்மேன் மையை, இன்று புத்திநுட்பத்தாலும் அன்புமி குந்த ஆதரவினாலும் நடுநிலைமையாலும் தேடிக் கொண்டார். உயரிய மனநிலைமையுடைய அவர் கள் 'ஸிலோண்' கவர்ணருடையவும் மற்றும் அன்புற்ற உபசாரங்களையடையவும், பட்டணத் தின் பல பக்கங்களையும் முற்றிலும் சுற்றிப் பார்க் கவும் செய்த பின்னர், மீண்டும் மரக்கலத்தில் ஏறிப் பயணமாயினர். சிங்கப்பூருக்குச் செல்லும் வழியில் பல இடங்களையும் கண்ணுற்றார்கள். திரு விதாங்கூரில் வெளியிடப்பட்ட 'க்ஷேத்திரப் பிர வேச' விளம்பரத்தைப் பின்பற்றி அவர்ணர்களுக் காகத் திறந்து வைக்கப்பட்ட சிற்சில இந்துக்க ளின் கோயில்களையும் கண்டார்கள். இவர்கள் மே மாதத்தில் சிங்கப்பூரை அடைந்தனர். பற்பல நாட்டினரும் பற்பல வகுப்பினரும் ஆகிய குடிக ளின் கூட்டங்கள் வரவேற்பதற்காக வந்து கூடி ன. அக்கூட்டங்களில் திருவிதாங்கூர்காரர்களும்

அதிகமாக இருந்தார்கள். அத்தருணத்தை எல்லா வரும் பாழாக்காமல், உலகில் பெரும் புகழுடைந் தவரும், அனைவராலும் போற்றப்படுபவருமாகிய மகாராஜாவின் மக்கள் என்ற மேன்மையான பதவியைப் பெற்றார்கள். ஆங்கிலசாம்ராஜ்யத் தின் கீழ்நாட்டு வகுப்பில் தலைசிறந்து விளங்கும் அவ்வழகிய பட்டணத்தில் அவர்கள் இரண்டு நாள் தங்கினார்கள். அவர்கள் காணுதற்குரிய பல இடங்களும் சென்று கண்டபின்னர் மறு படியும் கப்பலேறினார்கள். 'டச்சு இன்டீஸ்'ன் தலைநகராகிய 'பற்றேவியா' என்னுமிடத்தில் எழுந்தருளியபொழுது, அவ்விடத்தில் இதுகாறும் மற்றொரு அரச குலமும் அடையாத மட்டில், இவர்களுக்கு உபசாரங்கள் நடந்தன. டச்சு கவர் ணர் ஜனரலின் பிரதிநிதியும், ப்ரிட்டிஷ் பிரதி புருடனும் மற்று பல உயர்ந்த உத்தியோகஸ்தர் களும் மரக்கலத்தினுட் சென்று நல்வரவு கூறி இவர்களை எதிரேற்றனர். கவர்ணர் ஜனரல் அவர்கள், தான் கச்சேரி நடத்தும் பங்களாவில் வைத்து சிறப்பாக ஓர் வரவேற்பு விருந்து நடத் தினர். திருவிதாங்கூர் அரசகுலத்தின் மேன் மையும் அதைச் சார்ந்தவர்களின் பெருமையும் சொல்லிக் கேட்டபொழுது அந்நாட்டு மக்கள் இன்பக்கடலில் ஆழ்ந்தனர். இவர்களுடைய வரவினல் அங்கு பல கொண்டாட்டங்களும் நடை பெற்றன.

ஆனால், உபசாரங்களை அடைவதற்கும் வேடிக்கைகள் காண்பதற்கும் மட்டுமல்ல இவர்கள் யாத்திரையாகச் சென்றது. இவர்கள் கண்ணுற்ற இடங்களில் கண்ட காட்சிகளையும் குடிகளின் நன்மையின் பொருட்டு அவ்விடங்களில் செய்திருக்கும் ஏற்பாடுகளையும் நுட்பமாக அறிந்துகொண்டார்கள். குடிகள் நன்மையையடையும்படி மேற்கொள்ளுதற்குரிய பற்பல செய்திகளையும் நன்றாகத் தெரிந்துகொண்டார்கள். வாணிகம் பரவிப் பெருவளனோடு திகழும் இடங்கள், முயற்சி தழைத்தோங்கும் தொழிற்சாலைகள், கல்விக் கல்லூரிகள், கழகங்கள், பெருமகிழ்வு தரும் திருவிழித் தோட்டங்கள் முதலியவைற்றின் அருமை பெருமைகளைக் கண்டு களித்தனர். அவர்களுக்கு இந்துக்களுடைய கோயில்களில் ஆராதனை நடத்த அதிக விருப்பமிருந்தது. அதன் காரணம் தெள்ளென விளங்குவதே. பழைய காலங்களில் 'ஜாவா' 'பாலி' முதலிய தீவுகளில் இந்து மதக் கொள்கைளையும் கோயில் கட்டுவது, விக்கிரகம் செய்வது இவைகளின் முறைகளையும் பரவச் செய்தது தென்னிந்திய ஜனங்களே. அதனால், இன்றுள்ள பாரதநாட்டரசர்களின் முன்னணியில், மிகத் தொன்மை வாய்ந்த அரசகுலத்தின் பிரதிநிதியாக யாவராலும் போற்றப்பட்டு நிலவும் ஸ்ரீ சித்திரைத் திருநாள்

மகாராஜா அவர்கள் ‘சாந்த சமுத்திர’த் தீவுக ளில் உள்ள கோயில்களில் எழுந்தருளி தரிசனம் நடத்தியது அனைவருக்கும் உள்ளக்களிப்பைக் கொடுப்பதும், இந்து சமயத்தின் உறுதிப் பய னுக்குத் துணையாயிருப்பதும் ஆகும். ஆயின், மதக்கொள்கைகளில் நடுநிலைமை பெற்ற அவர் கள் புத்தர் கோயில்களிலும் மகம்மதியப் பள்ளி களிலும் மற்றைய ஆராதனையிடங்களிலும் மனக் களிப்புடன் சென்றிருந்தார்கள்.

இவர்கள் ‘டச்சு ஈஸ்டு இண்டீஸி’ல் எழுந் தருளியிருக்கும் தருணம் இந்தியச் சக்கிரவர்த்தி யாகிய மாட்சிமை தங்கிய ஜார்ஜு ஆறுமன் அவர்களுடைய மகுடாபிஷேகவிழா நடைபெற் றது. அதையொட்டி ப்ரிட்டீஷ் கௌன்ஸில் ஜனரல் நிகழ்த்திய வரவேற்பில் இவர்களும் சென்றிருந்தனர். அது மனக்களிப்பைக் கொ டுக்கும் ஓர் நிகழ்ச்சியாயிருந்தது. சுமார் இரு நூறு ஆண்டுக்கு முன் திருவிதாங்கூரில் அரசி யல் நடாத்திய வீரமார்த்தாண்டவர்ம மகாராஜா டச்சுகாரர்களைப் போரில் தோற்கச் செய்து மலை யாளத்தில் நின்றும்—தென்னிந்தியாவில் நின் றும்—அவர்களை ஓட்டினர். இப்பொழுது, திரு விதாங்கூர் மகாராஜாவாகிய ஸ்ரீ சித்திரைத் திரு நாள் அவர்கள், இந்திய நாட்டரசர்களின் தலைவ ராகவும் டச்சுகாரர்களைக் கீழ்ப்படுத்திய ஆங்கிலே

யர்களின் உறவினராகவும் பற்றேவியாவில் வெகு மதிக்கப்பட்டார். பழைய காலத்திலும் டச்சுகாரர்களின் கீழ்நாட்டுத் தலைநகர் பற்றேவியாவே என்பது நினைக்கத்தக்கது.

இங்ஙனம் தனது பதவியின் மகிமைக்கொத்தவாறுள்ள வெகுமதிகளைப் பெறவும், தேச சஞ்சாரத்தால் உலகபரிசயத்தைப் பெருக்கவும் செய்த பின்னர், மகாராஜா அவ்விடத்தில் நின்று திரும்பினார். மரக்கலம் சென்றடுத்த இடங்களிலெல்லாம் அவர் வணக்கமுடைய மக்களின் ஆதரவைப் பெற்றார். யாத்திரை தொடக்கம் முதல் இறுதிவரையிலும் இன்பம் பயப்பதாயிருந்தது. இவர்கள் ஏறிச் சென்ற கப்பலில் அநேகம் ஸ்கௌட்டுகளும் யாத்திரை செய்தது, திருவிதாங்கூரில் முக்கிய ஸ்கௌட்டு பதவியை வகிக்கும் மகாராஜாவுக்கு மனக்களிப்பை உண்டு பண்ணியது. மரக்கலம் கொளம்போ துறைமுகத்தை அடுத்ததும் சிலோன் கவர்ணரும் 'கொளம்போ மேயர்' முதலிய முக்கியர்களும் மகாராஜாவைப் பெருமையுடன் வரவேற்று வாழ்த்துப் பத்திரிகைகள் அளித்தார்கள். மகாராஜா பரிவாரங்களுடன் ஜூன் மாத இறுதியில் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார்.

# அத்தியாயம் 3.



## வெகுமதியும் சர்வகலாசாலையும்.

அறநெறி வாய்ந்து சிறப்புற்றோங்கும் மகா ராஜா, திருப்ப எழுந்தருளிய உடன் நாட்டின் முன்னேற்றத்திற்குரிய அரசியற் பணிகளில் ஏற்படலாயினர். அவர், தேசத்தின் நன்மைக் காக அல்லும் பகலும் மெய் வருத்தம் பாராது உழைத்து வருகின்றார். நாட்டை ஒப்புயர்வின்றி ஆக்குதலே அவரது நோக்கம். அதைச் செழிக் கச் செய்வதே அவரது கருத்து. சீரிய ஒழுக்கங் களிலும், மனோவன்மையிலும், கைத்தொழில் களிலும், அயல் நாட்டு வர்த்தகத்திலும், தேசப் பொது வேலைகளிலும் இந்நாடு இதரதேசங்கட்கு ஒரு வழிகாட்டியாயிருத்தல் வேண்டுமென்பதே அவரது விருப்பம். சின்னாள் சென்றபின், இந் தியபெடரேஷனில் நாட்டு இராஜ்யங்கள் சேரும் காரியத்தைப் பற்றிச் சிற் சில ஆலோசனைகள் நடத்துமாறு இந்தியா கவர்ன்மெண்டினால் நிய மிக்கப்பட்ட கம்மிட்டியுறுப்பினர்கள் திருவனந்த புரம் வந்தார்கள். புதிய ஏற்பாட்டில் சேரும் பொ ருட்டு வரையப்படும் சம்மதப் பத்திரத்தைப்பற்றி யும், அதனில் வெளியிடவேண்டிய உண்மைகளைப் பற்றியும் ஆழ்ந்த ஆலோசனை நடைபெற்றது.

கம்மிட்டியின் தலைவர் மிஸ்டர் லோதியனும் திருவிதாங்கூரின் பிரதிபுருடர் திவான் ஸசிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யரும் ஆயிருந்தனர். ஸசிவோத்தமர், நமது நாட்டின் உரிமைகளைப்பற்றி ஊக்கமாக வாதித்துக் கம்மிட்டியுறுப்பினர்களைத் தெரிவித்தார். வாதத்தில் அவருடைய பரந்த ஞானமும் வாக்கின் திறமும் விழுமிய கருத்தும் விளங்கின. இறுதியில், இந்தியாவுடையவும் ப்ரிட்டீஷ் சாம்ராஜ்யத்தினுடையவும் தற்பொழுதுள்ள நிலைமைக்குப் புதிய அரசியல் திட்டங்களைப்பற்றிய கடைசித் தீர்மானம் மற்றொரு தருணத்தில் செய்யவேண்டியதாக நேர்ந்தது. ஆயினும், மகாராஜா, நாட்டின் முக்கிய விருப்பங்களையெல்லாம் நன்குணர்ந்து நிறைவேற்றி வருவதாகக் குடிகள் பெற்ற நம்பிக்கை அனுபவத்தால் திடப்பட்டது. நாட்டினுள் அரசியற் பணிகளை நடத்துவதிலும் மகாராஜா இளைப்பின்றி உழைக்கும் ஆற்றலுடையவராக இருந்தார்.

இவ்விதம் நடைபெற்று வந்தபொழுது 1937 நவம்பர் மாதம் மகாராஜாவும், தாயார் மகாராணியாரும் ஆந்திர சர்வகலாசாலையில் நின்று ஆதரவுடன் அளிக்கப்பட்ட 'டி. லிட்.' என்ற உயரிய பட்டத்தைப் பெற்றுக் கொள்ளும் பொ

ருட்டு வாள்டயர் என்னும் இடத்திற்கு எழுந்த ருளினார்கள். திருவிதாங்கூர், கல்வி விஷயத்தில் இந்தியாவில் முதன்மையாக விளங்கும் செய்தி யாவரும் அறிந்ததே. சட்டசபைச் சீர்திருத்தம் முதலிய புதிய அரசியல் ஏற்பாடுகளும் மகாராஜாவின் புகழை வளர்த்தன. அன்றியும், க்ஷேத்திரப்பிரவேச விளம்பரமும் சட்டமாக ஏற்பட்டவுடன், மகாராஜா எல்லா அரசர்களாலும் மேற்கொள்ளத்தக்க மேன்மையுடையவர் என்றும், இந்து மதத்தைப் பாதுகாக்கும் உணர்வுடைய பெரியார் என்றும் உலகம் நன்கு அறிந்தது. அவ்வாறுள்ள ஓர் மகாராஜாவையும், நாகரீகமான மனப்பான்மை, சுதேசப்பற்று, பரந்த நோட்டம், அரும்பெரும் விடயங்களை நுனித்தறியும் ஆர்வம் முதலிய குணங்களுக்கு உறைவிடமாக அமைந்து தற்காலச் சரித்திரத்தில் புகழ் சிறந்து விளங்கும் தாயார் மகாராணியாரையும் முழுவன்புடன் ஆதரிக்கும் பொருட்டு ஜனங்கள் பதினாயிரக் கணக்காக வந்து கூடினார்கள். அவர்கள் அரசுக்கிசைந்தவாறு உபசாரங்களையும் கௌரவங்களையும் பெற்ற பின்னர் அப்பட்டணத்தில் உள்ள முக்கிய இடங்களைச் சென்று கண்ணுற்றனர். அவர்கள் வெகுமதிப் பட்டத்தைப் புனைந்துகொண்டது டிஸெம்பர் மாதம் 2-ம்தேதியாகும். அவர்கள் அரசத் திருக்கோலத்துடன்

சர்வகலாசாலை ஹாலில் எழுந்தருளினார்கள். தென்னாட்டினரான கற்றுணர்ந்த பெரியார்கள், பிரபு வம்சத்தினர், தொன்று தொட்ட பட்டதாரிகள், செல்வர்கள், விவசாயிகள், தொழிலாளர், உத்தியோகஸ்தர்கள், குடித்தலைவர்கள் இவர்களால் நிரம்பிய அம்மகாசபை ஓர் அழகிய காட்சியாக விளங்கிற்று.

குறிப்பிட்ட தருணத்தில் மத்ருஸ் கவர்னர் லார்டு எர்ஸ்கின் அவ்விடத்தையடைந்து அவையின் தலைவராக ஆசனத்தில் அமர்ந்தார். அவையோர்கள் எல்லோரும் விழிமேல் கண் வைத்த வண்ணம் நடைபெறும் காரியங்களைக் காணவும் கேட்கவும் ஆவலுற்றிருந்தனர். அப்பொழுது சர்வகலாசாலையின் உரையாளர் எழுந்து கவர்னரையும், மகாராஜாவையும், தாயார் மகாராணியாரையும் வணங்கி நின்று விளக்கமாகவும் சுருக்கமாகவும், பின்வருமாறு மொழிந்தார்:

"ஸ்ரீ ஸர். பால இராமவர்ம மகாராஜா அவர்கள் சிம்மாசனத்தில் அமர்ந்தது ஓர் புது யுகத்தின் உதயமென்றே சொல்ல வேண்டும். உதயகால ஒளி முறையாக வளர்ந்து உச்சிப் பொழுதில் திருவிதாங்கூருக்கு மட்டுமல்ல, பாரதநாட்டுக்கே எங்கும் வெளிச்சத்தையும் பரப்பையும் அளிக்

கும். மகாராஜா அவர்கள், சுயமதத்தைக் காப்பவர் ஆயினும் மற்றைய மதங்களை உள்ளன்புடன் நேசித்து ஆதரித்து வருகின்றார். பிராயத்தில் சிறுவராகிலும் அவருடைய கூரிய ஞானக்கண் வெகுதூரம் செல்லுகின்றது. அவர் ஏனைய அரச குணங்களுக்கும் உறைவிடமாகி விளங்குகின்றார். அவர் தாயார்மாட்டு வைத்திருக்கும் பேரன்பும் மதிப்பும் ஆதரவும், யாவரும் மேற்கொள்ள வேண்டிய குணங்களின் மாதிரியாக இலங்குகின்றன. உயரிய அரசகுலத்தில் அவதரித்த இந்த மகாராஜாவின் ஒழுக்கமும் அதுபோல உயர்ந்து விளங்குகின்றது. அவருக்கு இன்பமும் பதவியும் வயமாயினும் அவர் ஆடம்பரமற்ற வாழ்க்கையையே விரும்புகின்றார். அவர் ஓய்வின்றி நோக்கம் கொண்டிருக்கும் காரியம் குடிகளின் நன்மையே. இந்தியா மகாராஜ்யத்தின் மேன்மையும் விருப்பங்களும் எல்லாம் இவ்வாறுள்ள அரசனிலேயே நிலைகொண்டிருக்கின்றன. இங்ஙனம் பெருமை வாய்ந்த திருவிதாங்கூர் மகாராஜாவாகிய ஸ்ரீ. பால இராமவர்மர் அவர்கள் வெகுமதிப் பட்டத்தைக் கையேற்கும் பொருட்டு இன்று இங்கு எழுந்தருளியிருக்கின்றார்.''

பிரசங்கத்தில் வெளியிடப்பட்ட உண்மை மொழிகளைச் செவியுற்ற அவையோர்கள் களிப்

புற்றனர். பிறகு எழ்ஸ்கின் பிரபு வெகுமதிப்பட்டத்தை அன்புடனும் ஆதரவுடனும் மகாராஜாவுக்களித்தார். அதன் பின்னர், உரையாளர் மகாராணியாரின் குணங்களைக் கீழ்வருமாறு எடுத்துக் கூறலாயினர்:

"அடுத்ததாக யான் சொல்ல நினைப்பது மகாராஜா அவர்களின் தாயாராகிய சேது பார்வதிபாய் மகாராணியாரைப்பற்றியதாகும். பாரத நாட்டில் இப்பொழுதுள்ள பெண்மணிகளின் முன்னணியில், இயல்பான மேன்மையுடன் சிறந்து விளங்குபவரும், யாவராலும் அன்புடன் ஆதரிக்கப்படும் பதவியில் இலங்குபவரும் ஆகிய ஓர் அரசியை நாம் இன்று இவ்வவையில் காண்கிறோம். இப்பொழுது திருவிதாங்கூரில் காணப்படும் செல்வச் சிறப்புக்கு முக்கிய காரணம் இவ்வரசியே. இவ்வுண்மை யாவரும் அறிந்ததாகும். மிகுந்த தேசசஞ்சாரத்தினலும், இணையற்ற அறிவினலும், இன்றுள்ள அரசாட்சிக்கு ஊக்கமளித்து மேன்மேலும் தேசத்திற்கு நன்மையை வளர்த்துவதில் திறமுடன் முயன்று திருவிதாங்கூர் அரசவமிசத்தின் வாடாவிளக்காக விளங்கும் இவர் நாட்டின் பாக்கியத் திருமகள் என்று சொல்லுதல் மிகையாகாது."

பிறகு, பிரபு அவர்கள் இவ்வாறுள்ள வாழ்த்துரைக்குப் பாத்திரரான மகாராணியார் அவர்களுக்கு 'டி-லிட்' என்ற பட்டத்தையளித்தார். இவர்களிருவரும் பட்டங்களைப் பெற்ற பின்னர், ஜயபூர் மகாராஜாவின் உபசாரங்களைப் பெற்றுக் கொண்டு வாள்டயரில் நின்று புறப்பட்டு டிஸம்பர் 5-ரய்தேதி திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார்கள்.

இவர்கள் ஆந்திர சர்வகலாசாலையில் நின்று பட்டத்தைப் பெற்றது அதுபோன்ற கல்விக் கழகங்களில் இவர்களுக்குள்ள பற்றுதலைத் தெளிவாகக் காட்டுகின்றது. அத்தருணத்திலேயே திருவிதாங்கூரிலும் சர்வகலாசாலையொன்று நிறுவப்பட்டது. நம் நாட்டில் ஓர் சர்வகலாசாலை நிறுவுவதற்குரிய ஆலோசனைகள் தொடங்கி சுமார் இருபத்தைந்து ஆண்டுகளாயின. கல்விப் பயிற்சியில் திருவிதாங்கூர் சம்ஸ்தானம் இந்தியாவில் முதலாவதாக விளங்குகின்றது. கொல்லம் வருஷம் 990-ரமாண்டு நம் நாட்டில் அரசுபுரிந்த ஸ்ரீ பார்வதிராணியார் குடிகளுக்குக் கல்வி பயிற்றுவதற்காகச் செய்த ஏற்பாடு மிகப் பயனையடைந்துள்ளது. நமது நாட்டில் எழுதவும் படிக்கவும் தெரியாதவர்கள் மிக அபூர்வம். நமது நாட்டு ஜனங்கள் ஆங்கில பாஷையிலும் ஆங்கில சாஸ்திரங்களிலும் அதிகத் தேர்ச்சி பெற்றிருக்கின்றனர்.

மாணுக்கர்கள் உயர்ந்த பரீட்சைகளில் தேறி உயர்ந்த பட்டங்களைப் பெற்றனர். முற்காலத்தில் பரீட்சைகளில் தேர்ச்சியடைந்தவர்களுக்கு உத்தியோகம் கிடைப்பது எளிதாயிருந்தது. ஆனால், அத்தகையர் அதிகப்பட்டதனால் இப்பொழுது சர்க்கார் வேலை கிடைப்பது அரிதாயிற்று. தொழிலில்லாமை நாளுக்கு நாள் அதிகப்பட்டது. இந்நிலைமையில் மத்ருஸ் சர்வகலாசாலையில் சிற்சில சீர்திருத்தங்கள் நடைபெற்றன. உயர்ந்த கல்விப் பயிற்சியைக் கட்டுப்படுத்த சர்வகலாசாலை உறுப்பினர்களுக்கு அதிகாரம் உண்டு. நமது இராஜ்யம் மத்ருஸ் சர்வகலாசாலையுடன் சேர்ந்திருந்த காலம் வரையிலும் அதன் மேல்வரிச்சட்டங்களுக்கும் மேல்பார்வைக்கும் இணங்காமல் வேறு வழியும் இருக்கவில்லை.

மத்ருஸ் சர்வகலாசாலையுடன் சேர்ந்தொழுகுவது திருவிதாங்கூருக்கு நலமல்லவென்ற கொள்கை அரசாங்கத் தலைவர்களுக்கு வெகு நாளாக இருந்தது. கவர்ன்மெண்டார் பல கம்மிட்டிகளை நியமிக்கவும், அக்கம்மிட்டிகள் யாவும் நமது இராஜ்யத்திற்குப் பிரத்தியேகமாக ஓர் சர்வகலாசாலை இன்றியமையாததெனை வற்புறுத்தி அபிப்பிராயப்படவும் செய்தன. மகாராஜா அவர்கள், இவ்விஷயத்தில் பிரத்தியேக நோக்கம்

கொண்டதனுல் இக்கருத்தை நடப்பில் கொண்டு வந்து குணமளிக்கும் படிச் செய்வதற்குரிய திட்டம் கவர்ன்மெண்டுக்கு உண்டாயிற்று. மகாராஜா அவர்களின் கருத்தை சிக்கனமாக நிறைவேற்ற ஸசிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யர் தயாராயினர் அவர் பிரிட்டிஷ் இந்திய சர்வகலாசாலைகளுடன் பெற்றிருந்த பரிசயம் இதற்குத் துணையாக விளங்கியது. 1113-ம் ஆண்டு மகாராஜாவின் வருடப் பிறப்பு நாளில் சர்வகலாசாலையை நிறுவுவதற்கு உரிமைப்படுத்தும் சட்டத்திற்கு மகாராஜாவினுல் அங்கீகாரம் கொடுக்கப்பட்டது.

நமது சர்வகலாசாலையின் ஏற்பாடுகள் மேன்மையான பயனையடையத்தக்கனவும் அறிவின் வளர்ச்சிக்கு மிகவும் அனுகூலமுடையனவுமாகும். மனஉணர்வுக்கு இன்றியமையாத எல்லா விஷயங்களையும் கற்பிப்பதில் தலைவர்கள் அதிக நோக்கம் கொண்டிருக்கிறுர்கள். சர்வகலாசாலை, தொழிலில்லாமையை நீக்கும் வழிகளை விரித்துக் காட்டிக் குடிகளுக்குப் பேருதவி செய்வதில் முயன்று வருகின்றது. நமது சர்வகலாசாலையில் சரீரப் பயிற்சிக்குரியவைகளைக் கற்பிக்கவும் ஏற்பாடுகள் உண்டு. மன உணர்வும் ஆழ்ந்த அறிவும் ஏற்படுவதற்குத் தேகபலம் இன்றியமையாதத

ன்றோ. சர்வகலாசாலையைச் சார்ந்த 'லேபர் கோர்' இனத்தாரை இராணுவமுறையில் பழக்கு வதும் வழக்கமாயிருக்கின்றது. க்யாப்டன் கோத வர்ம ராஜா அவர்கள் இவ்வகுப்பின் தலைவராக விளங்குகின்றார். மகாராஜா அவர்கள் 'லேபர் கோரி'ன் வளர்ச்சியில் அதிக விருப்புடையவர்.

சர்வகலாசாலை நிறுவப்பெற்று இப்பொழுது மூன்று ஆண்டுகளே ஆயின ஆயினும் இந்தியாவிலுள்ள மற்றைய சர்வகலாசாலைகளுடன் ஒப்ப நிற்கும்படி அது வளர்ச்சியுற்றிருக்கின்றது. நமது சர்வகலாசாலையில் 'சான்ஸலர்' என்னும் பட்டத்தை அலங்கரிப்பது நமது மகாராஜாவே. மகாராணியாராகிய ஸ்ரீ சேது பார்வதிபாய் 'ப்ரோ சான்ஸலர்' ஆக விளங்குகின்றார். 'வைஸ் சான்ஸலர்' திவான் ஸசிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யராவர். சர்வகலாசாலையில் நின்று திவானுடைய ஷஷ்டிபூர்த்தியையொட்டி அவரை வெகுமதிக்கும்பொருட்டு "எல். எல். டி" என்னும் பட்டம் அவருக்கு அளித்திருக்கும் விவரமும் ஈண்டு எடுத்துரைக்கத்தக்கது. சர்வகலாசாலையை நிறுவியது கலைகளுக்கெல்லாம் துணையாயிற்று. பண்டைக்காலம் தொடங்கியே கேரளம் கலைகளுக்கு உறைவிடமாக விளங்குகின்றது. நமது நாட்டில் கணிதம் வைத்

தியம் ஸாஹித்தியம் சங்கீதம் சிற்பம் முதலிய கலைகளடைந்திருக்கும் சிறப்பு வெளிப்படையே. ஆயினும் நமக்கு மற்றைய நாட்டினர்களில் நின்று கற்கவேண்டியனவாகச் சில உள. ஆனால் மற்றையவர்களுக்கு நம்மிடமிருந்து கற்கவேண்டுவனப் பல உள. இங்ஙனமுள்ள மேன்மைகளில் ஒன்று நம் நாட்டில் பெண்களுக்குப் பண்டுளாகக் கிடைத்திருக்கும் சுதந்திரமே. மகாராணியார் அவர்கள் இச்செய்தியைப்பற்றித் திருவனந்தபுரத்தில் நிகழ்ந்த சர்வ இந்தியப் பெண்களின் கூட்டத்தில் மிக்க அபிமானத்துடன் நன்குகப் பிரத்தாபித்ததுண்டு. 1113-ம் மாண்டு மகாராஜா அவர்கள் திறந்து வைத்த சர்வ இந்திய பௌரஸ்திய சம்மேளனத்தில் விஜயம் செய்த அறிஞர்கள், கல்வியறிவிலும் கலையுணர்விலும் நமது நாடு பெற்றிருக்கும் மேன்மையைப் புகழ்ந்துரைத்திருக்கின்றனர்.

இந்திய நாட்டுக் கலைகளை உயிர்ப்பித்தலில் மகாராஜா அதிக விருப்புடையவர். 'ஸ்வாதி திருநாள் சங்கீதகலாலயம்', 'ஸ்ரீசித்திரோதய நர்த்தகாலயம்', 'ஸ்ரீரங்கவிலாஸம் ஆர்ட் கியாலறி', 'ஸ்ரீசித்திராலயம்' முதலிய தாபனங்கள் அருங்கலைகளில் மகாராஜாவுக்குள்ள பற்றுதலுக்குத் தக்க சான்றுகளாகும்.

இப்பொழுது சில ஆண்டுகளாக சங்கீதம் நமது நாட்டில் வியக்குமாறு உயர்ச்சியைப் பெற்றிருக்கின்றது. தென்னிந்தியாவில் மட்டுமல்ல, பாரதத்திலேயே உள்ள சங்கீத வித்வான்களின் முதன்மைபெற்று விளங்கிய ஸ்ரீஸ்வாதி திருநாள் மகாராஜா இயற்றிய பாடல்கள் தற்காலத்திற் கேற்றவாறு சங்கீத இலக்கண இலக்கியங்களில் வல்லமை பெற்ற அறிஞர்களால் ஸ்வரப்படுத்தப் பட்டுச் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் கற்பிக் கப்பட்டு வருகின்றன. 'ஸ்ரீஸ்வாதி திருநாள் அக்காடமி' என்னும் கழகம் தாயார் மகாராணி யாருடைய கருணையால் தினம்தோறும் வளர்ந் தோங்கி வருகின்றது. வெகுநாள் செல்லும் முன் சங்கீதக் கலையின் மேன்மைக்குத் திருவிதாங் கூர் நிலைக்களமாக விளங்கும் என்பதனை அனை வரும் திண்ணமாக ஒத்துக்கொள்ளுவார்கள். அபினயகலை அடைந்துவரும் உயர்ச்சியும் சொல் லுதற்குரியதே. மகாராஜாவின் ஆட்சிக்காலத் தில் சித்திரமெழுத்து என்னும்கலை புதிய தோற்ற த்தைப் பெற்றிருக்கின்றது. 'ஸ்ரீசித்திராலயம்' என்னும் சித்திரக்காட்சி சாலையில் விலைமதிக்கப்ப டாத அநேகம் படங்கள் சேகரித்து வைக்கப் பட்டிருக்கின்றன. ஏராளமான பொருள் செலவு செய்து உலகில் பல பக்கங்களில் நின்றும் வாங்கி வைக்கப்பட்டிருக்கும் விலைமதிக்கப்படாத அநேக சித்திரங்களை அவ்விடத்தில் காணலாம்.

சங்கீதத்தில் வல்லமையும் அபினயத்தில் திறமையும் ஒருங்கே மேன்மையாக விளங்கும் கதைகளி என்னும் அபினயம் இப்பொழுது அடைந்திருக்கும் பிரசாரமும் எல்லோரும் அறிந்ததே. முன்னாட்களில் ஆங்கிலேயர்கள் கதைகளியைப்பற்றி இகழ்ந்து பேசுவது வழக்கம். மலையாளிகளல்லாத பலரும் அதை 'ஊமையாட்டம்' என்று சொல்லி ஏளனம் செய்வதுண்டு. ஆயின் ஸ்ரீசித்திரைத் திருநாள் மகாராஜாவின் ஆட்சியில் கதைகளிக்கு மீண்டும் பெருமை கிடைத்திருக்கின்றது.

மகாராஜா அவர்களின் 28-ாவது வருடப்பிறப்புநாள்விழா கீழ்முறைப்படி விமரிசையாக வரிசைகளுடன் நடைபெற்றது. 1115-ாமாண்டு அற்பசிமாதம் திவான் ஸசிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யருடைய ஷஷ்டிபூர்த்தி விழா கொண்டாடப்பட்டது. அது குடிகளுக்கு அகமகிழ்வை வளர்த்திய ஓர் விசேஷ நிகழ்ச்சியாக விளங்கியது. மந்திராலயத்தில் வீற்றிருந்து அரசியற்பணிகளைச் சரிவர நடாத்தும் அவருடைய அரிய குணங்களும், வாக்கின் திறமையும், அளவில்லாத ஞானமும் எல்லோருடைய உள்ளத்தையும் கவர்ந்தன. இடைவிடாது நெடுநேரம் முனைந்து உழைக்கக்கூடிய அரிய வன்மை அவ

ருக்குண்டு. மனமும் உடலும் அவருடைய ஏவற் படி இயங்குகின்றன. அவர் அடைந்த பதவியும் புகழும் தற்செயலாலாவது கோள்வலியாலாவது திடீரென்று வந்தனவல்ல. இளைப்பின்றி இடை விடாதுழைத்த மெய்வருத்தத்தால் கிடைத்தன வென்க. இவருக்கு இயற்கையாகவே இருந்த பேரறிவின் ஒளி அவரது முயற்சியால் சாலவும் விரிந்து திகழ்வதாயிற்று.

"பெரியோர் யாண்டும் பெற்ற பதவிகள்
அரிதின் முயலாதடைந்தனவல்ல;
பிரியா நண்பர் பிரிந்துயிலிரவனும்
பெரிதும் உழைத்த பெற்றியாலென்க".

மகாராஜாவும் மந்திரியும் நாட்டின் நன்மையின் பொருட்டுச் செய்திருப்பதும் செய்துவருவதும் செய்யப்போவதுமான ஆட்சித் திட்டங்களில் நாட்டுமக்களின் சந்தோடமும் நன்றியும் இது காறும் இல்லாதமட்டில் வெளியிடப்பட்டன. திவானாக வீற்றிருக்கும் தருணம் அபூர்வமாகச் சிலர் மட்டுமே ஷஷ்டிபூர்த்தி விழாவைக் கொண் டாடப் பாக்கியம் பெற்றுள்ளார். முற்காலங்களில் பிரஜைகளுக்கு இவ்விடயத்தில் அதிக உணர்வும் இருக்கவில்லை; எல்லோரும் அதை வீட்டில் நிகழும் ஓர் விசேஷமாகவே எண்ணிவந்தார்கள். ஆனால், ஸசிவோத்தமருடைய ஷஷ்டிபூர்த்தி

விழாவில் வஞ்சிநாடு முழுதும் தெளிவுடன் விளங்கிற்று.

நாட்டுமக்களனைவரும், உலகெலாம் புகழ் பெற்ற பின்னர் ஸ்ரீசித்திரைத் திருநாள் மகாராஜா வின் சிறந்த அமைச்சளுக அமர்ந்து தொன்மை யும் பெருமையும் வாய்ந்து இந்நாட்டை மேன் மேலும் சிறப்பிக்கும் பொருட்டு இரவும் பகலும் ஓய்வின்றி முயலும் திவானைத் தக்கபடி வெகு மதிப்பதில் குதூகலம் பூண்டனர். நாட்டின் பல பக்கங்களிலும் கொண்டாட்டக் கம்மிட்டிகள் நிறுவப்பெற்றன. திவான் பகதூர் இராஜ்ய ஸேவாதுரந்தர வி. எஸ். ஸுப்பிரமணிய அய்யர் தலைநகரில் நிறுவப்பட்ட கம்மிட்டியின் தலைவராக விளங்கினர். எல்லோரும் சாதிவேறுபாடுகளும் மதவேற்றுமைகளும் இல்லாமல் ஒற்றுமையி லங்கி முயன்றனர். ஸசிவோத்தமருக்கு ஆயிரக் கணக்கான வாழ்த்துப் பத்திரிகைகள் அளிக் கப்பட்டன. பெருங்கூட்டங்களில் நிகழ்ந்த சொற் பொழிவுகள் அவரது வலிமையை நன்கு விளக்கின.

நாங்கள் முதலில், நாங்கள் முதலில், என்ற யட்டில் சமூகங்கள் விழாவை விநோதங்களுடன் கொண்டாடின. திருவிதாங்கூரில் வசிக்கும் அந்தணர்கள் எல்லோரும் ஒருங்கு சேர்ந்து

அவருடைய நீடியவாழ்வுக்காக வைதிக கருமங்களை நடத்தி மிக்க ஆகோஷத்துடன் நேரில் பூர்ணகும்பம் வைத்து அவரைப் போற்றினார்கள். பத்மவிலாஸத்தில் வைத்து அவருக்கு விருந்தளித்து உபசரித்தனர். வித்தியாபூஷிதர்களான வித்வான்கள் வடமொழியில் சொற்பொழிவு நடத்தி அவரை வாழ்த்திச் சிறப்பித்தார்கள். நாயர் ஸர்வீஸ் ஸொஸைற்றியால் சட்டசபைமந்திரத்தில் ஸர். ஸி. பி. யுடைய அழகிய பதிமையொன்று அமைக்கப்பட்டது. ஈழவர்கள் திருவனந்தபுரத்தில் 'ஸசிவோத்தம சத்திர'த்தின் முன்னில் அவருடைய மேலுடம்பின் பதிமையைத் தாபித்தனர். திருவனந்தபுரம் கத்தோலிக் பிஷப்பு தம்கீழுள்ள பள்ளிகளில் ஷஷ்டிபூர்த்தி விழாவை நன்றாகக் கொண்டாடும் படி ஏற்பாடுகள் செய்திருந்தார். பட்டம் ஆர்ச்சு பிஷப்பவர்கள் திவானை விருந்திற்கு அழைத்துத் தங்கத்தகட்டில் வரையப்பெற்ற வாழ்த்துப் பத்திரிகை யொன்றைச் சமர்ப்பித்தார். மற்றைய க்றைஸ்தவக் கழகங்களும் முஸ்லீம் குழாங்களும் தகுந்த உபசாரங்கள் நடத்தின. சர்வ கலாசாலையுறுப்பினர் மகாராஜாவின் தலைமையில் சபை கூடி ஸசிவோத்தமருக்கு 'எல். எல். டி.' என்ற உயர்ந்த பட்டத்தை யளித்தனர். கோயில்களில் பூஜைகளும் ஆராதனைகளும் சிறப்புடன் நடைபெற்றன. ஏழைகளுக்குப் பல விடங்களில் சிறந்த மட்டில் சாப்பாடு அளிக்கப்பட்டது.

மந்திரியின் ஷஷ்டிபூர்த்தி விழாவை ஆத ரித்து மகாராஜா அவர்கள் இளையராஜாவுடன் 'பக்திவிலாஸ'த்திற்கு எழுந்தருளினார். கற்றுணர்ந்த அறிவுடனும், உலகெலாம் ஓங்கிவிளங்கும் புகழுடனும், அதற்கும் மேலாகத் திருவிதாங்கூர் அரசகுலத்தோடுள்ள எல்லையற்ற அன்புடனும், மதிப்புடனும் மேன்மைபெற்று விளங்கும் ஸசி வோத்தமர் வைதிகக் கோலத்தில் வணக்கமுடன் அவர்களை நல்வரவேற்றுத் தக்கவாறு உபசரித்தார். அவருடைய பெண்டிர் பெருமதிப்புடன் அரசர்களுக்கு மங்கள ஆலத்தி நடத்தினார்கள். ஒரு வாரம் நீண்டு நின்ற இவ்விழாக் கொண்டாட்டங்கள், நம்பிக்கை கொள்ளுமாறு அவரது மகிமைக்குச் சான்றுகளாக விளங்கின. இதை நன்குணர்ந்த சீப் ஸிக்ரட்டரி, திவானைப் பற்றிப் பின்வருமாறு மொழிந்துள்ளார்—

"பற்பல காரியங்களில் பரிசயமும், அபிமானம் கொள்ளத்தக்க பயன்களும், உலகெலாம் பரவிய புகழும் பெற்று விளங்கும் ஸர். இராமஸ்வாமி அய்யரைப் போன்ற திவான்கள் திருவிதாங்கூரில் மந்திரி பதத்தை அலங்கரிக்கவில்லை. இத்தகைய திவானுடைய துணை மகாராஜாவின் ஆட்சிக்குப் பேரருளாகும்"



ஸச்சிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யர்



ஸசிவோத்தமர் மகாராஜா அவர்களையும் இளையராஜா
அவர்களையும் நல்வரவேற்பது

இவ்வாறு எல்லா வழிகளிலும் குடிகளின் நலத்தின் பொருட்டும், தேசத்தின் வளர்ச்சியின் பொருட்டும் உழைத்துவரும் மகாராஜா அவர்கள், மாட்சிமை தங்கிய ப்ரிட்டீஷ் சாம்ராஜ்யத்தின் பிரதிபுருடர்களாலும், மந்திரிமார்களாலும், சக்கிரவர்த்தி அவர்களாலும் ஆதரிக்கப்பட்டு இலங்குகின்றார். திருவிதாங்கூர் இராஜ்யமானது, ஆட்சிமுறைகளில் மற்றைய நாட்டு இராஜ்யங்கள் பின்பற்றத் தகுந்தமாதிரியான ஒரு இராஜ்யம் என்பதை எல்லோரும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா, மிகப் பழைய அரசகுலத்தின் தலைவர், தலைமுறைத் தொடர்பாக பாரத நாட்டினர் அடையவேண்டிய ஆழ்ந்த அறிவின் உறைவிடம், நீதி என்று கண்டால் பழைய வழக்கங்களைப் போலும் கருதாமல் குடிகளின் நன்மையைப் புலர்த்துவதில் எப்பொழுதும் தயாருடையவர், அருங்கலைகளைப் பாதுகாப்பவர், என்றிவ்வாறு பற்பல சிறந்த நிலைகளைப் பெற்று நிலவுகின்றார்

1116-ஆமாண்டு வருடப் பிறப்புநாள்விழா வாரத்தில் 'கனகக்குன்று' அரமனையில் நடைபெற்ற சம்ஸ்தான விருந்தில் வைத்து 'றைற்று ஆனரபிள்' ஸ்ரீனிவாச சாஸ்திரியார் மாட்சிமை தங்கிய விருந்தினர்களின் பிரதிநிதியாகக் கீழ்வரு

மாறு மொழிந்துள்ளார்—"மகாராஜா அவர்களின் அரசாட்சி - திவானுடைய துணையுடன் அவர் நடத்தும் அரசாட்சி—எல்லா ஜனங்களுடையவும் புகழ்தலுக்குப் பாத்திரமாயிருக்கின்றது. பற்பல இராஜ்யங்களைப் பற்றி நான் தெரிந்துகொண்டதுண்டு. பல அரசர்களுடனும் பிரஜைகளுடனும் யான் நன்ருகப் பரிசயப்பட்டுள்ளேன். அதனுல் இந்த இராஜ்யத்தின் நிலைமையிலும் வளர்ச்சியிலும் எல்லோரும் ஆதரவு கொண்டிருக்கின்றனர் என்று கூற எனக்குரிமையுண்டு". இங்ஙனம் நமது இராஜ்யம் நாம் எண்ணுவதிலும் உயரிய பதவியைப் பெற்று விளங்குகின்றது.

---

# அத்தியாயம் 4.

## சில முக்கிய நிகழ்ச்சிகள்.

1113-ஆமாண்டு, முதலாவது அரசகுமாரன் அவதரித்ததால் இராஜ்யம் அருள்பெற்று விளங்கிற்று. அவ்வாண்டிலேயே மார்கழிமாதம் 21-ஆம் தேதி அவிட்டம் திருநாளில், ஸ்ரீ கார்த்திகைத் திருநாள் இராணியார் ஓர் அருமைப் புதல்வனை

என்றெடுத்து அன்னையென்னும் பதவிக்கு உரிய வராயினர். இராணியார், திருவவதாரம் செய்த இவ்வருமை மைந்தனுடன், கல்வியும் பணிவும் ஒருங்கு கூடியதுபோல விளங்கினார். இந்நற் செய்தியைச் செவியுற்ற நாட்டு மக்களனைவரும் முகில் ஒலி கேட்ட மயில் போல மிகப் பெரு மகிழ்ச்சியடைந்தனர். முக்கிய உத்தியோகஸ்தர் களுக்கும் நாட்டுத் தலைவர்களுக்கும், அவதாரம் செய்தஅரசிளங்குமரனை உபசாரமுடன் சென்று காண அனுமாதம் கிடைத்தது. அவர்கள் நிறை மதியம்போல் கண்களுக்கு இன்பத்தை விளை விக்கின்ற அரசிளங்குமரனைக் கண்ணுற்று அன்பு நிறைந்த மனத்தினராய் ஆசிகூறினார்கள். ஸ்ரீமூலம் அசம்பிளி, ஸ்ரீசித்திரை ஸ்டேட் கௌண்ஸில் இவ்வவைகளின் உறுப்பினர்கள் எல்லோரும் வணக்கமுடன் வாழ்த்துரை கூறி இந்த நற்தருணத்தில் தங்களது சந்தோஷத்தை வெளியிட்டார்கள்.

1114 ஈமாண்டு நாட்டில் பல சம்பவங்கள் நிகழ்ந்தன. ஆவணி மாதத்தில் சேதுலக்ஷ்மிபாய் மகாராணியாருடைய புதல்வி உத்தரம் திருநாள் அரசகுமாரிக்குப் 'பள்ளிக் கெட்டு'த் திருமணம் வரிசைகளுடன் கொண்டாடப்பட்டது. இது நடந்து சில நாட்கள் சென்றதும், வைஸ்ராய்

அவர்கள் திருவிதாங்கூருக்கு விஜயம் செய்வதை யொட்டியுள்ள தயாரிப்புக்களை ஜாக்கிரதையாகச் செய்வதில் கவர்ன்மெண்டின் நோட்டம் பதிந்தது. சக்கிரவர்த்தி அவர்களின் பிரதிபுருடர்களாகி பாரதநாட்டில் அரசியல் செலுத்தும் வைஸ்ருய்கள் நமது நாட்டுக்கு விஜயம் செய்வது பெருமதிப்புடைய காரியமன்றோ? லின்லித்கோ பிரபுவும் அவரது மனைவியாரும் நமது நாட்டில் விஜயம் செய்யும் தருணம் அவர்களை வரவேற்பதற்கும் உபசரிப்பதற்கும் தகுந்த ஏற்பாடுகள் யாவும் விரைவாகச் செய்யப்பட்டன. அரசியற் செல்வத்தைப் பெருக்கக் கருதிய மகாராஜா அவர்கள், அதிதிமந்திரமடைந்து வைஸ்ருய் அவர்களை உபசாரமாகக் காண்பதும் அதற்குப் பதிலாக பிரபு அவர்கள் வானளாவிய மாளிகைகளுடன் இலங்கும் 'கவடியார் குன்று' அரண்மனை புகுந்து மகாராஜா அவர்களைத் திருப்பக் காண்பதும் முறையாக நடைபெற்றன. நுண்ணிய மதிநுட்பமும் அறம் வழா நிலையும் பெற்ற மகாராஜா அவர்கள் மாட்சிமை பொருந்திய அதிதிகளை வெகுமதிக்கும் பொருட்டுக் 'கனகக் குன்று' அரண்மனையில் வைத்து சம்ஸ்தான விருந்தொன்றைச் சிறப்பாக நடத்தினர். அத்தருணத்தில் பிரபு அவர்கள் மகாராஜாவின் வாழ்த்துரைகளுக்குப் பதிலாக அவருடைய ஆட்சித் திறமை,

கல்வியறிவொழுக்கங்கள், வள்ளற்றன்மை, அற நெறி கடவாது குடிகளைப்புரக்கும் தன்மை, முத லிய அருங்குணங்களை உள்ளன்புடன் எடுத்துக் கூறிப் புகழ்ந்தார்.

பிக்கானீர் மகாராஜாவும் திருவனந்தபுரத் திற்கு விஜயம் செய்தார். ஸ்ரீசித்திரைத் திருநாள் மகாராஜா அவர்கள் அடைந்த கௌரவங்களில் ஒன்று இந்தியாவின் தெற்கு மூலையில் கிடக்கும் திருவிதாங்கூருக்கு வட இந்திய நாடுகளுடன் நேர்ந்திருக்கும் சிறந்த நட்பாகும். நலம் பல கனிந்து திகழும் நமது மகாராஜா அவர்கள், இதற்கு முன் பிக்கானீர் இராஜ்யத்தில் விஜயம் செய்து தம் அரசின் மகிமைக்குத் தக்கவாறு உப சாரங்களைப் பெற்றிருப்பதுண்டு. பிக்கானீர் தேச அரசராகிய மகாராஜா திராஜ கங்காஸிங்ஜி பகதூர் திருவிதாங்கூரில் விஜயம் செய்தது, அந்த நட்பு மிகுந்து விளங்க ஏதுவாயிற்று. கற்றுணர்ந்த அறிஞரும் பெருமை பெற்றுப் புகழ டைந்தவரும் ஆகிய அம்மகாராஜா, அன்பு மிக்க நண்பராகிய நமது மகாராஜா அவர்களின் பதிமையை நிறுவுவதற்குள்ள பீடத்தின் அடிப் படைக் கல்லிடல் என்னும் மங்களகருமத்தினை ஆடம்பரமாக நிறைவேற்றினார். அம்மகாராஜா, பெருமாளின் திருவருளின் பெருமையைப் புலப்

படுத்திய நமது மகாராஜா அவர்களால் வெளியி டப்பட்ட க்ஷேத்திரப்பிரவேச விளம்பரத்தின் ஞாபகத்தின் பொருட்டுப் பதிமை தாபித்தலின் தகுதியைப்பற்றி மிகப் புகழ்ந்து கூறவும், நமது மகாராஜாவின் பெருமைகளைப் பற்றி விரித்து ரைக்கவும் செய்தார். இப்பொழுது, கைவண்ணம் சிறந்த இப்பதிமை, கோட்டையினுள்ளிருக்கும் அரண்மனையின் முன்னிற் காணப்படும் பூந் தோட்டத்தின் நடுவில் அமைக்கப்பெற்று ,நமது மகாராஜாவின் சீர்மைக்கு ஒத்தவாறு அழகுடன் இலங்குகின்றது. இப்பதிமையை ஆடம்பரங்க ளுடன் திறந்து வைத்த தோல்பூர் மகாராணு அவர்களும், நமது மகாராஜாவின் குணங்களை யெடுத்துச் சொல்லிப் புகழ்ந்தார். இதனிடையில் நிகழ்ந்த மற்றொரு முக்கிய சம்பவம் இளையராஜா அவர்களின் 'திருமாடம்பு' என்ற உபநயனவிழா வின் கொண்டாட்டமாகும் வீரர்களுக்குரிய வில் வித்தை முதலியனவற்றை மந்திரத்தூய்மை யுடன் தொடங்கவேண்டிய க்ஷத்திரியர்கள், அ வைகளைச் சரிவர நிறைவேற்றும் சடங்காகும் 'திருமாடம்பு' என்பது அந்தணர்களுக்கு விதித் திருக்கும் உபநயனம், காயத்திரீ மந்திரத்தின் உப தேசம், சமாவர்த்தனம் முதலிய கருமங்கள் இதில் உள்படுகின்றன. இவ்வடியந்திரத்தைச் சார்ந்து நடத்துவதற்குரிய பல சடங்குகள் உள. அவை

'பள்ளி பஜனம்' (மற்று வேலைகளை நிறுத்திவிட்டு எப்பொழுதும் அகத்தூய்மையுடனும் புறத்தூய் மையுடனும் விரதமாக இருந்து கடவுளைத் தியா னித்தல்), ஈசுவரசேவை, வழிபாடு என்றிவை களுக்கு மேல் 'திருமுடிக் கலச'மும் 'படியேற்ற' மும் ஆகின்றன. வேதப்படியுள்ள ஒழுக்கங்க ளையும் பழக்க வழக்கங்களையும் முறையுடன் ஆதரிப்பதில் திருவிதாங்கூர் அரசகுலம் அதிக ஜாக்கிரதையுடையது. ஸ்ரீ சேது பார்வதிபாய் மகாராணியாரும் இங்ஙனமுள்ள மங்களச் சடங் குகளை நடத்துவதில் அதிக விருப்புடையவர். 'படியேற்றம்', 'திருமாடம்பு' விழாவின் கடைசிச் சடங்காகும். கோயிலில் யானையொன்றைப் பெரு மாள் சன்னிதியில் உருவிருத்துவதும், கோயிலை வலம் வைப்பதும் வழக்கம். அதன் பின், 'காஞ்சீபுரம் கொண்டான் மட'த்தில் எழுந்தருளி இருந்து 'திருவாழி சாத்து'வதும் நடைபெற்று வருகின்றது.

மகாராஜா, ஆசை மிகுந்து அதி விமரிசை யாக நடத்திய இளையராஜாவின் 'திருமாடம்பு' விழா அனைவர்க்கும் மனக்களிப்பைக் கொடுத்தது. இவ்விழா நடைபெறும் தருணம் தலைநகரில் விஜ யம் செய்திருந்த பிக்கானீர் மகாராஜாவும், மார்த் தாண்டவர்ம இளையராஜா அவர்களை ஆசிகூறி

வாழ்த்தினர். அரசகுலத்தைச் சார்ந்தவர்களு டைய அடியந்திரங்கள் யாவும் திருப்பிதாங்கூரில் சம்ஸ்தான விழாக்களாகக் கொண்டாடப்பட்டு வருவது வழக்கம். இளையராஜா அவர்கள் இளை மைப் பருவத்திலேயே நாட்டுமக்களுடைய அன் புக்கும் ஆதரவுக்கும் பாத்திரராயினர். அவர் மானத்தையே பொருளாகக் கொண்டவர். அறி விற் சிறந்தவர். உலோபம் முதலிய குற்றங்களால் சிறிதும் பற்றப்படாதவர். பிரஜைகள் எல்லோ ரும் சாதிமத வேற்றுமையின்றி அவரிடத்துக் கௌதுகம் பூண்டு விளங்கினர்கள்.

இங்ஙனம் அரசகுலத்தின் சிறப்புடன் நாட் டின் நன்மையும் வளர்ந்து தழைத்தது 1114-ா மாண்டு நாட்டில் ஓர் பெரும் சமாதானக் குறைவு உண்டாயிற்று. சுதந்திரவாதிகளாகிய சிலர், ஆட்சிக் காரியங்கள் எல்லாவற்றிலும் கவர்ன் மெண்டு சட்டசபையோடு உத்தரவாதப் பண்ண வேண்டுமென்றும், அதற்குத் தக்கவாறு ஏற்பாடு களை உடனடி செய்யவேண்டுமென்றும் வற்பு றுத்தினர்கள். நாள் செல்லச் செல்ல இவ்வேண் டுகோள் ஆவலாதியாகவும் ஆவலாதி பலபரீட் சையாகவும் மாறிற்று. நாட்டின் பல பக்கங்களி லும் கலவரங்கள் உண்டாயின. ஆயின், இக்கல வரங்கள் பயனொன்றும் பெறவில்லை. தவறுதல்

செய்தவர்கள் தண்டிக்கப்பட்டனர். நீதியுயான செய்கைகளில் நின்று பின்மாறிச் செய்த தவறு தல்களைப் பற்றி பச்சாத்தாபப்பட்டவர்களுக்குக் கவர்ன்மெண்டு மாப்பளித்தது. இக்கலவரத்தின் பயனாக நாட்டுமக்களுக்கு இராஜபக்தியும், கவர்ன் மெண்டுடனுள்ள வணக்கமும், முன் இருந்ததை விடப் பதின்மடங்கு விருத்தியடைந்தது.

நாட்டினுள் கட்சியின்றி கவர்ன்மெண்டும் குடிகளும் ஒற்றுமையிலிலங்க முயலவேண்டும் தருணமும் வந்து சேர்ந்தது. ஆங்கிலேயர்களும் ஜர்மன்காரர்களும் ஒருவரோடொருவர் நிகழ்த் திய பெரும்போர் உலகத்தை இளக்கச் செய்தது. இப்போரில் நமது மகாராஜா அவர்கள் மற்றைய நாட்டு அரசர்களுக்கு வழிகாட்டியாக விளங் கினர். தமது அரசியல் விரிவதற்குச் செயற்பா லனவின்னவென்பதை நன்குணர்ந்த மகாராஜா, திருவிதாங்கூரில் நின்று மிகுந்த பொருளும் மற்றைய சாமான்களும் அளித்து ப்ரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு உதவி புரிந்தார். தற்பொழு தும் உதவி வருகின்றார். ஆண்மையும் திண்மை யும் பெற்ற நமது இராணுவவீரர்களை அனுப்பி யது மட்டுமல்ல, சிற்சில விமானங்களையும் படைக் கருவிகளையும் அளித்தார். மகாராணியாராகிய ஸ்ரீசேதுபார்வதிபாய் அவர்களும் மிகவும் விலை பெற்ற போர்விமானங்களை அளித்தார். நமது

இராணுவவீரர்கள் போருக்குப் புறப்படும் தருணம், மகாராஜா அவர்கள் எழுந்தருளி அவர்களுக்கு வாழ்த்துரைகள் மொழிந்தார் அவர் திருவாய் மலர்ந்தருளியது இவ்வாறுரும்—"இன்று அதிகாலையில் நாம் இங்கு எழுந்தருளியது, யுத்தத்திற்காகப் புறப்படும் நுங்களுடன் கொஞ்சம் அளவளாவும் பொருட்டே. இது நினைவுக்குரிய ஓர் அரிய சந்தர்ப்பமாகும். ஆனால், இது நமது தேசசரித்திரத்தில் இதற்கு முன் நடைபெறாத ஓர் சம்பவமன்று. ஆங்கிலசாம்ராஜ்யம் இந்தியாவில் உயர்ச்சியைப் பெற்றுத் தொடங்கிய காலத்தில் திருவிதாங்கூர் வீரர்கள் ஆங்கில வீரர்களுடன் ஒன்று சேர்ந்து போர்புரிந்ததுண்டு. அவர்கள் திறமையுடனும் ஒழுக்கமுடனும் ஆங்கில வீரர்களுடன் பழகிவந்ததாகச் சரித்திரப்பிரசித்தியுண்டு. சென்ற ஐரோப்பா மகாயுத்தத்தில் நமது இராணுவ வகுப்பில் நின்றும் அதற்குப் புறமே நின்றும் வீரர்கள் போர்முனைக்குச் சென்றிருந்தார்கள். அவர்கள் வெற்றியுடன் திரும்பிவந்தனர். இப்பொழுது திறமையுடைய வகுப்பினரான நீங்கள் புறப்படுகின்றீர்கள். உங்கட்குக் கிடைத்திருக்கும் இச்சந்தர்ப்பம் மதிப்புடையதும் பொறுப்புடையதுமாகும். யான் உங்களுடைய போக்கை ஜாக்கிரதையுடனும் அன்புடனும் கவனித்துக் கொண்டிருப்பேன். போர் விரைவில்

வெற்றியில் முடியுமாறு நாம் வாழ்த்துவோம். வெற்றியுடனும் கீர்த்தியுடனும் நீங்கள் திரும்பி வருவதை எதிர்பார்ப்போம். கடவுள் துணைபுரி வாராக.'' இவ்விதமான மொழியைச் செவியுற்ற சேனைவகுப்பு இன்பக் கண்ணீரைப் பொழிந்தது. வீரர்கள், நலம் கனியும் மகாராஜாவின் கட்டளையைத் தலைமேற்கொண்டார்கள் என்பது உண்மையான செய்தியாகும்.

இங்ஙனம் பொங்கிவரும் மேன்மையையும் புகழையும் பெறுதற்குரிய வழிகளை நடாத்துவதில் மகாராஜா அவர்களுடைய திவான் ஸசிவோத்தம ஸர். ஸி. பி. இராமஸ்வாமி அய்யரின் உதவி எத்தகையதென்பது சிறுவர்களும் நன்கறிந்த ஒரு விஷயமாகும். அறிவிற் சிறந்த அமைச்சர் சொல்வழி நிற்றலால் வரும் நலங்களும் எத்தகையனவென்பதும் தெள்ளென விளங்கும். ஸர் ஸி. பி., பாரதநாட்டில் சிறந்து விளங்கும் தலைவர்களின் முன்னிலை பெற்றே திருவிதாங்கூருக்கு வந்தார். சென்ற பத்து ஆண்டுகளாக அவர் மகாராஜா அவர்களின் நம்பிக்கையுடைய போதகராக தேசத்திற்குக் கடும் தொண்டு புரிந்து வருகின்றார். அங்ஙனமுள்ள அமைச்சனை நன்கு மதித்தல் கடமையெனக் கருதி மகாஜனங்கள் அவரைப் புகழ்ந்து வாழ்த்துகின்றனர்.

---

